# இஸ்லாமிய அடிப்படைக் கல்வி



# இஸ்லாமிய அடிப்படைக் கல்வி

தொகுப்பு:

மௌலவி.
A. முஹம்மது வலிய்யுல்லாஹ் யூஸுஃபி

வெளியீடு:
தாஜ் பப்ளிஷர்ஸ்
பள்ளிவாசல் தெரு,
சிந்தாமணிப்பட்டி (P.O).
கரூர் Dt- 621 301.

# அறிமுக உரை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!

அல்லாஹு ஆலா பள்ளப்பட்டியில் மத்ரஸதுல் இர்ஸாத் மத்ரஸதுல் காதிரிய்யா. மத்ரத்துல் முனீரில் இஸ்லாம். ஆகிய மூன்று மக்தப் மத்ரஸாவில் காலையும் மாலையும் ஓதி கொடுக்கும் பாக்கியத்தை தந்தான்.

அதன்பயனாக குர்ஆன் மதரஸா மாணவர்களின் இன்றைய மனநிலையை புரிந்து கொள்ளும் வாய்ப்பு கிடைத்தது. ஒருசில மாணவ மாணவியர்களைத் தவிர பெரும்பாலான பிள்ளைகளுக்கு மார்க்கக்கல்வியில் ஆர்வம் குறைவாகவேயிருக்கிறது. நாம் அவர்களை முறைப்படுத்துவதில் என்ன முயற்சி எடுத்தாலும் அது தோல்வியில் முடிகின்றது.

மார்க்கக்கல்வி பற்றி பல நூல்கள் வெளியாகியிருப்பினும் அது விரிவாக இருப்பதால் சிறு பிள்ளைகளுக்கு தேவையான 1. கொள்கை, 2. வணக்கம், 3. கொடுக்கல் வாங்கல் 4.பண்பாடு 5.குண ஒழுக்கம் ஆகிய இஸ்லாமிய ஐந்து அவசிய உட்பிரிவுகள் சம்பந்தபட்ட ஆரம்பமான கருத்துக்களை உள்ளடக்கிய ஓர் சிறிய ஆரம்ப நூல் அவசியம் என்ற உணர்வு அடிக்கடி வந்து கொண்டிருந்தது அல்ஹம்து லில்லாஹ் இந்த எண்ணத்தைப் பூர்த்தி செய்யும்படியான 'தீனீ இல்ம்' என்ற ஓர் உர்து நூலை பார்த்தேன். இதையே தமிழாக்கம் செய்து விடுவது என்று முடிவு செய்து துவங்கினேன். மாஷா அல்லாஹ், பூர்த்தியாகி புத்தக வடிவில் தங்களின் கரங்களில் தவழ்கிறது.

→

இதை உர்துவில் தொகுத்த மூல நூலாசிரியர் மௌலானா மெஹ்ரபான் அலி மிஃப்தாஹி என்பவர்களாவார் இவர்கள் மௌலானா அஸ்அதுல்லாஹ் ஹஜ்ரத் அவர்களின் கலீபாவான பகீஹுல் இஸ்லாம் மௌலானா முஜஃப்பர் ஹுஸைன் ஹஜ்ரத் சஹாரான்பூரி அவர்களின் கலீபா இவர்கள். பல நல்ல நூல்களை எழுதி வெளியிட்டார்கள்.

இவரை முர்ஷிதுல் உம்மத் (சமுதாய வழிகாட்டி) என்று மக்கள் மரியாதையாக அழைத்தார்கள் அல்லாஹ்வின் நாட்டப்படி இரண்டு வருடத்திற்கு முன் இறைவனடி சேர்ந்து விட்டார்கள் அல்லாஹ் அவர்களுக்கு மன்னிப்புச் செய்வானாக. அல்லாஹ் அவர்களின் அந்தஸ்தை உயர்த்துவானாக. (ஆமீன்)

இந்த நூலை மௌலானா அவர்களுக்காகவும் எனக்கு ஆரம்ப உஸ்தாதான மௌலானா இப்ராஹீம் ஹஜ்ரத் (ரஹ்) அவர்களுக்கும் எனது தந்தை மர்ஹூம் அ.சீ, அலியார் ராவுத்தர் அவர்களுக்கும் எனது வளர்ப்புத் தந்தையாகிய மர்ஹூம் சை. அப்துல் காதர் அவர்களுக்கும் எனது வளர்ப்புத்தாயும் எனது மூத்த சகோதரியுமான மர்ஹூமா.அ ஆபிதாபேகம். அவர்களுக்கும் சமர்பிக்கிறேன். அல்லாஹ் இதை ஏற்று இதை அவர்களுக்கு சதக்கத்துல் ஜாரியாக கியாமத் நாள்வரை ஆக்கியருள்வானாக! இந்நூல் சிறப்பாக வெளிவர அச்சுப்பிழை இல்லாமல் வடிவமைத்த வத்தலக்குண்டு **ஸ்டார்** கிராபிக்ஸ் நிறுவனத்தாருக்கும் என் இனிய நண்பர்கள் **திரு.கி.சாந்தகுமார்** மற்றும் **ஜனாப். வைகை A.அனிஸ்** அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி.

17.04.2002

பள்ளப்பட்டி

**அ.முஹம்மது வலிய்யுல்லாஹ்**

பேராசிரியர்

மக்தூமிய்யா அரபி க்கல்லூரி

# பகுதி - 1

## இஸ்லாமிய நம்பிக்கைகள்

### பாடம் - 1 அல்லாஹ்வை நம்புவது

**கேள்வி** : நாம் யாருடைய அடியார்கள் ?

**பதில்** : நாம் அல்லாஹ் உடைய அடியார்கள்.

**கேள்வி** : அல்லாஹ் என்பவன் யார்?

**பதில்** : நம்மையும் முழு மனிதர்களையும் வானம், பூமி,இன்னும் அனைத்துப் படைப்புகளையும் தன் சக்தியால் படைத்து பராமரித்து வருபவன்தான் அல்லாஹ்.

**கேள்வி** : அல்லாஹ்வை நாம் எப்படி நம்ப வேண்டும்?

**பதில்** : அல்லாஹ்வை நாம் இப்படி நம்பி இருக்க வேண்டும்.

1. அல்லாஹ் ஒருவனாக இருக்கிறான்.
2. அவனே வணக்கத்திற்கும் தகுதியானவன்.
3. அவனுக்கு எந்தவிதமான கூட்டாளியும் இல்லை.
4. அவன் இருந்து கொண்டே இருக்கிறான்; இன்னும் எப்பொழுதும் இருந்து கொண்டே இருப்பான்.
5. அவன் எல்லாவற்றையும் அறிகிறான்.
6. அவன் எந்தக் குறையும் இல்லாத பரிசுத்தமானவன்.
7. நம்மை வாழவைப்பதும் மரணிக்கச் செய்வதும் அவனே.
8. அவன் உண்ணுவதும், குடிப்பதும், உறங்குவதும் இல்லை.
9. அவனுக்கு மகன்,மகள்,தாய், தந்தை, மனைவி, மக்கள் யாரும் இல்லை.
10. அவனுக்கு எந்தத் தேவையும் இல்லை. நாம் தான் அவன் பக்கம் தேவை உடையவர்களாக இருக்கின்றோம்.
11. அவனைப் போன்று உலகில் யாரும் இல்லை.
12. அவனுக்கு நம்மைப் போன்று கை, கால், மூக்கு, காது, கண் எதுவும் இல்லை.
13. அவன் நாடியதை செய்வான்.
14. அவனைப் பற்றி நம்மால் யாரும் புரிய முடியாது.
15. அவனுக்கு எந்தக் கடமையும் இல்லை.
16. அவன் நாவின்றி பேசுபவன்.

17. அவன் காது இல்லாமல் கேட்பவன்.

**கேள்வி** :நம்முடைய மார்க்கம் எது ?

**பதில்** :நம்முடைய மார்க்கம் இஸ்லாம்.

**கேள்வி** :இஸ்லாம் என்றால் என்ன?

**பதில்** :இஸ்லாம் என்றால் லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி,

**பொருள்:** வணக்கத்திற்குத்தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயனில்லை. முஹம்மது நபி (ஸல்) அலைஹிவஸல்லம் அவர்கள் அல்லாஹ்வுடைய திருத்தூதராக இருக்கிறார்கள் என்று மனப்பூர்வமான முறையில் நம்பி (ஏற்றுக்கொண்டு) நாவால் மொழிவதற்குப் பெயர்தான் இஸ்லாம் என்று சொல்லப்படும்.

**கேள்வி** : ஈமான் என்றால் என்ன? அவை எத்தனை?

**பதில்** : ஈமான் என்றால் நம்புதல் என்று பெயர். ஏழு விஷயத்தை நம்புவதற்குப் பெயர்தான் ஈமானாகும். 1. அல்லாஹ், 2. மலக்குகள், 3. வேதங்கள்?4. ரசூல்கள், 5. உலக முடிவு நாள் , 6.தக்தீர் என்னும் விதி. 7. மரணத்திற்குப்பின் எழுப்பப்படுதல்.

## பாடம் – 2 மலக்குகள்

**கேள்வி :** மலக்குகள் என்போர் யார்?

**பதில்** :அல்லாஹ் ஒளியால் ஓர் படைப்பை படைத்துள்ளான். அவர்களை வானவர்கள் என்று சொல்கின்றோம். அவர்கள் ஆணுமல்ல பெண்ணுமல்ல. அவர்கள் உண்ணுவதுமில்லை. அவர்கள் அல்லாஹ்வுடைய கட்டளைகளுக்கு கட்டுப்பட்டு நடப்பார்கள். அல்லாஹ்வுக்கு எப்பொழுதும் மாறு செய்யமாட்டார்கள்.

**கேள்வி :** மலக்குகள் எத்தனை பேர் இருக்கிறர்கள் ?

**பதில்** : அல்லாஹ்வைத்தவிர வேறுயாருக்கும் தெரியாது, மலக்குகள் நிறைய இருக்கிறார்கள்.

**கேள்வி :** மலக்குகளின் வேலை என்ன?

பதில் : சிலர் படைப்பினங்களுக்கு உணவு கொடுக்கும் வேலையில் இருக்கிறார்கள். சிலர் மழை பொழிய வைப்பார்கள். சிலர்

மக்களுடைய நன்மை, தீமையை எழுதுகிறார்கள். சிலர் சுவனம் இன்னும் நரகத்தினுடைய பொறுப்புகளில் இருக்கிறார்கள். சிலர் அல்லாஹ்வை வணங்குவதிலும், அவனை நினைப்பதிலும் இருக்கின்றார்கள்.

**கேள்வி :** மலக்குகளை மனிதர்கள் பார்க்க முடியுமா?

**பதில் :** அல்லாஹ் நாடினால் நம்மால் பார்க்க முடியும்.

## பாடம் - 3. வேதங்கள்

**கேள்வி :** வேதங்கள் எத்தனை உள்ளன?

**பதில் :** அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட வேதங்கள் அதிகம் இருக்கின்றது. அதில் பிரபல்யமானது மொத்தம் நான்கு,

1. தவ்ராத் வேதம்,இது நபி மூஸா(அலை)அவர்களுக்கு அருளப்பெற்றது.

2. ஜபூர்வேதம்,இது நபி தாவூது (அலைஹி)அவர்களுக்கு அருளப் பெற்றது.

3. இன்ஜீல் வேதம்,இது நபி ஈஸா(அலைஹி)அவர்களுக்கு அருளப்பெற்றது.

4. குர்ஆன் மஜீத், நம்முடைய நபி முஹம்மது ( ஸல்) அவர்களுக்கு அருளப்பெற்றது.

**கேள்வி :** குர்ஆன் மஜீத் எத்தனை ஆண்டுகளில் இறங்கியது?

**பதில் :** குர்ஆன் மஜீத் 23 ஆண்டுகளில் இறங்கியது.

**கேள்வி :** வேதங்களைப் பற்றி நாம் எப்படி நம்ப வேண்டும்?

**பதில் :** வேதங்கள் அனைத்தும் உண்மையானது இறுதி வேதம் குர்ஆன் ஆகும். இதிலுள்ள சட்டங்கள்தான் இறுதிநாள் வரை நிலைத்திருக்கும். மற்ற வேதங்கள் அனைத்தும் மாற்றப்பட்டு விட்டன. குர்ஆனை யாரும் மறுக்க முடியாது. அல்லாஹ் அதை நான் பாதுகாப்பேன் என்று சொல்லியுள்ளான். குர்ஆன் ஓதுவதால் நன்மை கிடைக்கின்றன.

## பாடம் - 4. நபிமார்கள்

**கேள்வி :** நாம் யாருடைய சமுதாயத்தவர்களாக இருக்கின்றோம்?

**பதில் :** நாம் இறைவனின் தூதர் முஹம்மது நபி (ஸல்) உடைய

சமுதாயமாக இருக்கின்றோம்.

**கேள்வி :** நபிமார்கள் என்றால் யார்?

**பதில் :** நபிமார்களும் மனிதர்கள் தான் ஆனால் உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவர்கள். அல்லாஹ்வுடைய கட்டளைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லுவதற்காக அல்லாஹ் அவர்களை தேர்ந்தெடுத்து அவர்களுக்கு வேத புத்தகங்களை கொடுத்திருக்கிறான் இவர்களையே இரசூல்மார்கள் என்று கூறுகின்றோம். இவர்கள் உண்மையாளர்கள் பொய் சொல்ல மாட்டார்கள். இவர்கள் பாவம் செய்வதில்லை. இவர்கள் சொற்படி நடந்தால் சுவனம் செல்லலாம். இவர்களுக்கு மாறு செய்தால் நரகம் கிடைக்கும்.

**கேள்வி :** முதல் நபி யார்? இறுதி நபியார்?

**பதில் :** முதல் நபி ஆதம் அலைஹி ஸ்ஸலாம், இறுதி நபி நம்முடைய முஹம்மது நபி (ஸல்) அலைஹி வஸல்லம் அவர்கள்.

## பாடம் – 5 மிஃராஜ்

**கேள்வி :** மிஃராஜ் என்றால் என்ன அர்த்தம்?

**பதில் :** மேலே ஏறுதல் என்று அர்த்தம்

**கேள்வி :** நம் நபியவர்கள் மிஃராஜுக்குச் சென்றார்கள் என்பதின் கருத்து என்ன?

**பதில் :** அல்லாஹு தஆலாவின் கட்டளைப்படி ஒரு நாள்புராக் என்ற வாகனத்தில் ஏறி மக்காவிலிருந்து ஜெருசலம் நகரில் பைத்துல் முகத்தஸ் என்ற பள்ளிவாசல் வரை சென்றார்கள். பிறகு அங்கிருந்து ஏழு வானங்களையும் கடந்து அல்லாஹ் அழைத்த இடத்திற்கு சென்றார்கள். பிறகு சுவனம், நரகம், இரண்டையும் பார்த்தார்கள். அல்லாஹ்விடம் பேசினார்கள். அப்பொழுதுதான் தொழுகை கடமையானது. திரும்ப மக்காவிற்கு வந்து விட்டார்கள் இதற்குதான் மிஃராஜ் என்று சொல்லப்படுகிறது.

**கேள்வி :** இது நம் நபிக்கு மட்டும் ஏற்பட்டதா?

**பதில் :** ஆம். வேறு எந்த நபிக்கும் ஏற்படவில்லை.

**கேள்வி :** இந்த மிஃராஜை மறுப்பது எந்தளவு குற்றம்?

பதில் : இதை மறுப்பவர் இஸ்லாத்தை விட்டு வெளியேறியவராக கருதப்படுவார்.

## பாடம் - 6 ஸஹாபாக்கள்

**கேள்வி :** ஸஹாபாக்கள் என்போர் யாவர்?

பதில் : நம் நபிகளாரை பார்த்த முஸ்லிம்களுக்கு ஸஹாபாக்கள் என்று சொல்லப்படும்.

**கேள்வி :** ஸஹாபாக்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்?

பதில் : சரியான எண்ணிக்கை யாருக்கும் தெரியாது. பல இலட்சங்கள் இருக்கலாம்.

**கேள்வி :** எல்லா ஸஹாபாக்களும் அந்தஸ்தில் சமமானவர்களா?

பதில் : ஏற்றத்தாழ்வு இருக்கிறது. நம்மைவிட அனைவரும் சிறந்தவர்கள் என்பதில் சந்தேகமில்லை மிகச்சிறந்த ஸஹாபாக்கள் நான்கு பேர்கள். ① ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) ② ஹஜ்ரத் உமர் பாரூக் (ரலி) ③ ஹஜ்ரத் உதுமான்கனி(ரலி),④ ஹஜ்ரத் அலிமுர்தளா (ரலி) ஆகியோர்கள்.

**கேள்வி :** ஸஹாபாக்களைக் குறைகூறுவது கூடுமா?

பதில் : ஸஹாபாக்கள் பற்றி எந்தக் குறையும் கூறக்கூடாது.இப்படி கூறுவது பாவமாக இருக்கின்றது.

**கேள்வி :** நம்முடைய நபியைப்பற்றி நாம் எப்படி நம்ப வேண்டும்?

பதில் : எல்லாப் படைப்புகளைவிடவும் மிகச்சிறந்தவர்கள் இவர்களுக்குப் பிறகு எந்த நபியும் வரமுடியாது. இவர்களுடைய மார்க்கம் இறுதி நாள் வரையிருக்கும்.

இவர்கள் மிஃராஜுக்கு சென்று நேரடியாக அல்லாஹ்வை பார்த்துவிட்டு வந்தார்கள். அல்லாஹ் இவர்களுக்கு எல்லாத்தையும்விட மிக அதிக அளவு கல்வியைக் கொடுத்திருந்தான். இவர்கள் முழு மனித சமுதாயத்திற்கு நபியாக இருக்கிறார்கள்.

ஜின்என்று சொல்லப்படும் பூதவர்கங்களுக்கும் இவர்கள் தான், நபியாவார்கள். அல்லாஹ்வுடைய அனுமதி பெற்று பாவிகளுக்கு மறுமையில் அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக்காக

பரிந்துரை செய்வார்கள். இவர்கள் பாவத்திலிருந்து பாதுகாக்கப்பட்டவர்கள். இவர்களின் கட்டளைப்படி நாம் வாழ்வது அவசியமாக இருக்கிறது.

**கேள்வி :** நபிமார்களை புரிந்து கொள்ள ஏதேனும் அத்தாட்சி இருக்கிறதா?

**பதில் :** ஆம். முஃஜிஸா என்ற அற்புதங்கள் காட்டினார்கள்.

**கேள்வி :** அற்புதம் என்றால் என்ன?

**பதில் :** நடைமுறைக்கு மாற்றமான முறையில் காரியங்களை நடத்திக்காட்டுவது.

**கேள்வி :** நமது நபிக்கு என்ன அற்புதம் வழங்கப்பட்டது?

**பதில் :** நிறைய அற்புதம் அல்லாஹ் கொடுத்திருக்கிறான் எல்லாவற்றையும் விட மிகப்பெரிய அற்புதம் திருக்குர் ஆன் ஆகும். இது இறுதி நாள் வரை நிலைத்து நிற்கும்.

**கேள்வி :** யார் வேண்டுமானாலும் நபியாக முடியுமா?

**பதில் :** மனிதனுடைய முயற்சிக்கு அப்பாற்பட்டதாகும். அல்லாஹ் தனது அருளால் யாரை தேர்ந்தெடுக்க விரும்புகிறானோ அவர்களே நபியாக முடியும்.

**கேள்வி :** எத்தனை நபிமார்கள் வந்திருக்கிறார்கள்?

**பதில் :** அல்லாஹ்வுக்குதான் தெரியும். எத்தனை நபிமார்கள் இறைவன் அனுப்பினானோ அவர்கள் அனைவரும் உண்மையாளர்கள் என்று நாம் நம்ப வேண்டும்.

## பாடம் – 7 வலிமார்கள்

**கேள்வி :** வலிமார்கள் என்போர் யார்?

**பதில் :** அல்லாஹ் ரஸூல் உடைய கட்டளைக்கு கட்டுப்பட்டு நடக்கக்கூடிய, இன்னும் அல்லாஹ்வை நல்லமுறையில் வணங்கக்கூடிய முஸ்லிம்களுக்கு வலியுல்லாஹ் (இறைநேசர்) என்று சொல்லப்படும்.

**கேள்வி :** எல்லா முஸ்லிம்களும் இறைநேசர்களாக ஆகமுடியுமா?

**பதில் :** முயற்சி செய்தால் அல்லாஹ்வுடைய நாட்டம் இருந்தால் ஆகலாம்.

**கேள்வி :** வலிமார்களுக்கு மார்க்கப்படி நடக்காமலிருப்பதற்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளதா?

பதில் : இல்லை. ஷரீஅத்துடைய சட்டங்களை விடுவதற்கு யாருக்கும் அனுமதி இல்லை. அப்படி விடுபவர்கள் இறைநேசர்களாக இருக்க முடியாது.

**கேள்வி :** அவ்லியாக்கள் கப்ருகளுக்கு ஸஜ்தா செய்வது, நேர்ச்சை செய்வது போன்றவைகள் கூடுமா?

**பதில்** : கண்டிப்பாக கூடாது. அல்லாஹ்வை தவிர வேறு யாருக்கும் ஸஜ்தா செய்யக் கூடாது. நேர்ச்சை செய்வது ஈமானையே தகர்த்து விடக்கூடிய செயலாகும்.

**கேள்வி :** கராமத் என்றால் என்ன?

**பதில்** : இறை நேசர்களுக்கு அவர்களுடைய கண்ணியத்தை உயர்த்துவதற்காக சிலசமயங்களில் சில அதிசயங்களை நிகழ்த்துவதற்கு அல்லாஹ் தஆலா சக்தியை கொடுத்திருக்கிறான். அதற்கு கராமத் என்று சொல்லப்படும்.

**கேள்வி :** இறை நேசர்களாக இருப்பதற்கு கராமத் அவசியமா?

**பதில்** : இல்லை.

## பாடம் - 8 - ஜின்கள்

**கேள்வி :** ஜின் என்று எதற்கு சொல்லப்படும்?

**பதில்** :நெருப்பால் படைக்கப்பட்ட ஓர் படைப்பாகும். அவர்களில் ஆண்கள் பெண்கள் இருக்கிறார்கள். உண்ணுகிறார்கள், பருகுகிறார்கள், திருமணம் செய்கிறார்கள். இவர்களையே தமிழில் பூதம் என்று சொல்லப்படுகிறது.

**கேள்வி :** ஜின்கள் (பூதங்கள்) அல்லாஹ்வுடைய கட்டளைக்கு கட்டுபட வேண்டுமா?

**பதில்** : ஆம். அவர்களிலேயே நல்லவர்கள், தீயவர்கள் அறிஞர்கள், பாமரர்கள், முஸ்லிம்கள், முஸ்லிமல்லாதவர்கள் என்று பல விதமாக இருக்கிறார்கள்.

**கேள்வி :** ஷைத்தான் எதனால் படைக்கப்பட்டவன்?

**பதில்** :அவனும் ஜின் வர்கத்தை சேர்ந்தவன் தான், நெருப்பால் படைக்கப்பட்டுள்ளான்.

**கேள்வி :** ஏதாவது ஓதி ஜின்களை வசப்படுத்தவது கூடுமா?

**பதில்** : கூடாது.

## பாடம் - 9 விதி

**கேள்வி :** விதி என்றால் என்ன?

**பதில் :** அல்லாஹ் தஆலா நடக்ககூடிய அனைத்து செயல்களையும் நிர்ணயித்து விட்டான். அதன்படிதான் எல்லாம் நடக்கும். அதற்கு விதி என்றும் தக்தீர் என்றும் சொல்லப்படுகிறது.

**கேள்வி :** விதியை நம்புவது என்றால் எப்படி?

**பதில் :** உலகில் நடக்ககூடிய அனைத்து செயல்களும் இறைவனின் நாட்டப்படியே நடக்கிறது. உணவு கொடுப்பதும் அவனே, நோய், துன்பம் போன்றவைகளும் அவன் நாட்டப்படியே வரும் என்று நம்ப வேண்டும்.

**கேள்வி :** மனிதனுக்கு எந்த வித இஸ்டமும் இல்லையா?

**பதில் :** இஸ்டமும் கொடுக்கப்பட்டிருக்கிறது .அதை வைத்து நாம் நல்லதை தேர்ந்தெடுக்க வேண்டும். தீயதை விட்டு தவிர்ந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி :** விதியை நம்புவதால் ஏற்படும் பயன் என்ன?

**பதில் :** என்ன துன்பம் ஏற்பட்டாலும் அல்லாஹ்வின் நாட்டப்படியே நடக்கிறது அதில் நமக்கு நல்லது ஏதோ உள்ளது என்று பொறுமை செய்து கொள்வதால் மன நிம்மதியும் நமக்கு ஏற்படக் கூடிய சுகங்களும் , அவனுடைய நாட்டப்படியே நடக்கிறது என்று எண்ணி அவனுக்கு நன்றி செய்வதால் சந்தோஷமும் ஏற்படுகிறது.

**கேள்வி :** விதியை நம்பாதவனுக்கு என்ன சொல்லப்படும்.?

**பதில் :** விதியை நம்பாவிட்டால் அவன் முஸ்லிமாக இருக்க முடியாது.

## பாடம் - 10. கப்ருடைய விளக்கம்

**கேள்வி :** மண்ணறையில் கேள்வி கேட்பது யார்?

**பதில் :** இரு மலக்குகள் வருவார்கள். ஒருவரின் பெயர் முன்கர், இன்னொருவர் நகீர் இருவரும் ஒவ்வொருவரிடமும் மூன்று கேள்வி கேட்பார்கள்.

**கேள்வி :** கப்ரில் என்ன கேட்பார்கள்? கப்ரில் இருப்பவர்கள் பதில் எப்படி சொல்லுவர்ர்கள்?.

**பதில் :** 1. உன்னுடைய இறைவன் யார்? 2. உன்னுடைய மார்க்கம்

என்ன? 3. உன்னுடைய நபி யார்? உண்மையான முஸ்லிம் பதில் இப்படி சொல்வான். என்னுடைய இறைவன் அல்லாஹ். என்னுடைய மார்க்கம் இஸ்லாம், என்னுடைய நபி முஹம்மது ( ஸல்) அவர்கள் முஸ்லிம் அல்லாதவர்கள் பதில் சொல்ல மாட்டார்கள்.

**கேள்வி :** மண்ணறையில் சுகம், மற்றும் வேதனை உண்டா?

**பதில்** : சரியாக பதில் சொல்லுபவர்கள். சுகமாக இருப்பார்கள். பதில் சொல்லாதவர்களுக்கு வேதனை தரப்படும்.

**கேள்வி :** மண்ணறையில் எப்படி வேதனை நடைபெற முடியும்?

**பதில்** : இவ்வுலகிற்கும் மறு உலகிற்கும் இடையில் ஓர் உலகம் உள்ளது. அதற்கு திரையுலகம் ஆலமெ பர்ஜஹ் என்று சொல்லப்படும். அதில் தான் சுகம் வேதனையெல்லாம் நடக்கிறது நாம் இதை நம்ப வேண்டும். இதை மறுத்தால் முஸ்லிமாக இருக்க முடியாது.

## பாடம் – 11.கியாமத்

**கேள்வி :** கியாமத் என்றால் என்ன ?

**பதில்** : இவ்வுலகம் ஒரு நாள் அழிந்து விடும். அந்த நாளுக்கு கியாமத் (இறுதி நாள்) என்று சொல்லப்படும்.

**கேள்வி :** கியாமத் எப்பொழுது வரும்?

**பதில்** : அல்லாஹ்வுக்குத் தான் தெரியும். கியாமத் வருவதற்கு முன்பு சில அடையாளங்கள் தெரியும் என்று நம் நபியவர்கள் அருளியுள்ளார்கள்.

**கேள்வி :** அந்த அடையாளங்கள் என்ன?

**பதில்** : உலகில் பாவிகள் அதிகமாகி விட்டால், பெற்றோர்களுக்கு மாறு செய்தால் நம்பிக்கைக்கு துரோகம் செய்தால், ஆடல் பாடல் அதிகமானால், நல்லோர்களான நமது முன்னோர்களை குறை கூறினால், கல்வி இல்லாதவர்கள் தலைவர்களானால், ஆடு மேய்த்தவர்கள் கூட வசதியாகி, பங்களாக்கள் கட்டினால் , தகுதி இல்லாதவர்களுக்கு பெரும் பதவிகள் கிடைத்தால் கியாமத் நாள் நெருங்கி விட்டது என்று பொருளாகும்.

கியாமத் மிக மிக நெருங்கி விட்டால் ஹஜ்ரத் மஹ்தி வருவார்கள். தஜ்ஜால் வருவான். ஹஜ்ரத் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் வானத்திலிருந்து இறங்குவார்கள் யஃஜூஜ் மஃஜூஜ்

கூட்டம் வரும், சூரியன் மேற்கே உதிக்கும். இதற்கு பின் உலகம் அழிந்து விடும்.

**கேள்வி :** உலகம் எப்படி அழியும்?

**பதில் :** அல்லாஹ்வுடைய கட்டளைப்படி வானவர் ஹஜ்ரத் இஸ்ராஃபீல் (அலை) அவர்கள் சூர் ஊதுவார்கள். அந்த பயங்கர சப்தத்தை கேட்டு முழு உலகமும் அழிந்து விடும். பிறகு மறுமுறை ஊதுவார்கள். எல்லா மனிதர்களும் எழுந்து விடுவார்கள். பயந்து இருப்பார்கள். மஹ்ஷர் மைதானத்தில் அனைத்து மக்களும் ஒன்று கூடுவார்கள். அங்கு அவர்கள் வாழ்க்கை பற்றி கேள்வி கணக்கு கேட்கபடும். நன்மை தீமைக்கு கூலி கொடுக்கப்படும்.

பிறகு சிராத்துல் முஸ்தகீம் பாலத்தில் நடக்க வேண்டும். அது வாளை விட கூர்மையானதாக இருக்கும். நபிமார்கள் இன்னும் சில நல்லவர்கள் அல்லாஹ்வின் அர்ஷுவில் அதன் நிழலில் இருப்பார்கள். நம் நபியவர்கள் கவ்தர் என்ற தண்ணீர் தடாகத்தில் நின்று தன்னுடைய சமுதாயத்தினருக்கு நீர் புகட்டுவார்கள். அதை குடித்து விட்டால் பிறகு எப்பொழுதும் தாகமே எற்படாது.

உண்மை முஸ்லிம்களுக்கு அல்லாஹ்வுடைய விஷேச அருள் கிடைக்கும். பாவியான முஸ்லிம்கள் நரகத்திற்கு செல்வார்கள். அவர்களுக்காக நபிமார்கள் நம்முடைய நபி மற்றும் நல்லோர்கள் அல்லாஹ்விடம் அவனின் அனுமதி பெற்று சிபாரிசு(பரிந்துரை) செய்வார்கள். இறுதியாக அனைத்து முஸ்லிம்களும் சுவனம் செல்வார்கள்.

## பாடம் – 12. சுவனம்

**கேள்வி :** சுவனம் என்றால் என்ன?

**பதில் :** சுவனம் என்றால் ஓர் ஒளிமயமான - இன்பம் தரும் தங்குமிடமாகும். விரும்பியதெல்லாம் கிடைக்கும். அதை அனுபவிக்கலாம். தோட்டங்கள் , பங்களாக்கள், நதிகள், பணியாட்கள் எல்லாம் கிடைக்கும்.

**கேள்வி :** சுவனத்தில் எத்தனை அந்தஸ்துகள் உண்டு?

**பதில் :** சுவனத்தில் நிறைய அந்தஸ்துகள் உண்டு. எல்லாவற்றையும் விட உயர்ந்த அந்தஸ்து பிர்தௌவ்ஸ். சுவனத்தில் கிடைக்கும் இந்த பிர்தௌவ்ஸ் சுவனத்திற்கு மேல் அல்லாஹ்வின் சிம்மாசனமான அர்ஷ்அங்கு உள்ளது. இந்த சுவனத்திலிருந்து பால்

ஆறு, மது ஆறு, தேன் ஆறு, தண்ணீர் ஆறு ஓடுகிறது.

**கேள்வி** :சுவனத்தில் கிடைக்கும் பெரும் பாக்கியம் என்ன?

**பதில்** : எல்லாம் வல்ல அல்லாஹுதஆலாவை கண்ணால் பார்க்கும் பெரும் பாக்கியம் கிடைக்கும். அவனை பார்த்தால் பேரின்பம் ஏற்படும். அவரவர் செயலுக்கு தகுந்தாற்போல் இந்த தரிசனம் கிடைக்கும்.

**கேள்வி** : சுவனத்தின் சுற்றளவு எவ்வளவு?

**பதில்** : அல்லாஹ்வுக்குதான் தெரியும்.

**கேள்வி** : இப்பொழுது சுவர்க்கம் இருக்கிறதா? இனிமேல் தான் உண்டாக்கப்படுமா?

**பதில்** : இப்பொழுதும் இருந்து கொண்டுள்ளது. இதை நம்ப வேண்டும். மறுப்பது கூடாது.

## பாடம் – 13. நரகம்

**கேள்வி** : நரகம் என்றால் என்ன?

**பதில்** : வேதனையான தங்குமிடம் – இறை மறுப்பாளர்களுக்கும் பாவிகளுக்கும் உண்டாக்கப்பட்டுள்ளது. தாங்க முடியாத துன்பம் துக்கம் அங்கு ஏற்படும் எல்லாவிதமான வேதனைகளும் அங்கு உண்டு.

**கேள்வி** : முஸ்லிம்களும் நரகிற்கு செல்வார்களா?.

**பதில்** : பாவம் செய்த முஸ்லிம்களில் சிலர் தண்டனை அனுபவிக்க நரகம் செல்வார்கள். தண்டனை பெற்ற பிறகு இறைவனின் அருளால் சுவர்க்கத்திற்கு வந்து விடுவார்கள்.

**கேள்வி** : நரகிலே நிரந்தரமாக இருப்பவர்கள் யார்?

**பதில்** : அல்லாஹ்வை நம்பாதவர்களும், அல்லாஹ்வுக்கு இணைவைப்பவர்களும்.

**கேள்வி** : பூதங்களுக்கும் வேதனை உண்டா?

**பதில்** :ஆம். பாவம் செய்து இறைவனை மறுத்த பூதங்கள் நரகிற்கு செல்லும்.

**கேள்வி** : வேதனை கொடுப்பவர்கள் யார்?

**பதில்** : வேதனை கொடுப்பவர்கள் வானவர்கள்.

**கேள்வி** : நரகம் இப்போதும் உள்ளதா?

பதில் : ஆம். இப்பொழுதும் உள்ளது.

கேள்வி : நரகத்தின் சுற்றளவு என்ன?

பதில் : நரகத்தில் சுற்றளவை அல்லாஹ்வே மிக அறிந்தவன். நரகம் இருப்பதை மறுப்பவன் முஸ்லிமல்ல.

## பாடம் - 14 ஈமானை பாதுகாப்பது

கேள்வி : ஈமான் என்றால் என்ன?

பதில் : அல்லாஹ் -வானவர்கள் - வேதங்கள் - தூதர்கள் - இறுதி நாள் - விதி -மரணத்திற்கு பிறகுள்ள வாழ்வு இந்த ஏழு விஷயங்களையும் நம்புவதற்குத் தான் ஈமான் என்று சொல்லப்படும். நம்புபவர்களுக்கு முஃமின்கள் என்று சொல்லப்படும்.

கேள்வி : ஈமானை போக்கி விடும் விஷயங்களும் உண்டா?

பதில் : ஆம். இறைவனுடைய -அவனுடைய ரசூலுடைய ஏதேனும் சட்ட திட்டங்களை மறுத்தாலோ அவமரியாதை செய்தாலோ ஈமான் போய் விடும்.

கேள்வி : ஈமானை போக்கும் செயல்களில் சிலவற்றை கூறுங்கள்.

பதில் : கவனமாக கேளுங்கள்.

1. முஸ்லிமாக இல்லாமல் இருந்திருந்தால் அப்படி இருந்திருக்கலாம். இப்படி இருந்திருக்கலாம் என்று கூறுவது.

2. அல்லாஹ்வை மறுப்பது.

3. வானவர்களை நபிமார்களை கேவலமாக பேசுவது.

4. அல்லாஹ்வுக்கு வேறு மனிதன் கிடைக்கவில்லையா? எனக்கு இப்படி துன்பத்தை தந்துள்ளானே என்று கூறுவது.

5. அல்லாஹ்வுக்கு சக்தி இல்லை என்று கூறுவது.

6. தொழுகையாவது, மண்ணாங்கட்டியாவது என்று கேவலமாக கூறுவது.

7. ரமலான் நோன்பு தேவை இல்லாதது என்று கூறுவது.

8. நான் அல்லாஹ்வுக்கெல்லாம் பயப்படுவது கிடையாது என்று கூறுவது.

9. தொழக் கூடாது. தொழுதால் துன்பம் வரும் என்று கூறுவது.

10. அல்லாஹ்வே நேரடியாக வந்து சொன்னாலும் நான் கேட்க மாட்டேன் என்று கூறுவது.

11. நான் செய்வது அல்லாஹ்வுக்கு கூட தெரியாது என்று கூறுவது.

12. ஷரீஅத் சட்டங்களை குறை கூறுவது.

**கேள்வி :** மேற் கூறியதை செய்தால் ஈமான் போய்விடும் என்பதன் கருத்து என்ன?

**பதில் :** நாம் முஸ்லிம் இல்லை என்று பொருள், இப்படிப்பட்ட செயல்களை செய்தால் நாம் இதுவரை செய்த நன்மைகள் எல்லாமே அழிந்து விடுகிறது. மீண்டும் தவ்பா, செய்து கலிமா சொல்லி முஸ்லிமாகாமல் மரணித்து விட்டால் ஜனாஸா தொழுகை நடத்தப்பட மாட்டாது, முஸ்லிம்களின் கப்ருஸ் தானில் அடக்கம் செய்யப்பட மாட்டாது.

**கேள்வி :** நிர்பந்தத்தில் ஈமானை அழிக்கும் செயலை செய்து விட்டால் குற்றமில்லையா?

**பதில் :** அப்படி சொல்லாவிட்டால் உயிரைப்போக்கி விடுவேன் என்றோ, அடித்து முடமாக்கி விடுவேன் என்றோ அப்படி செய்ய சக்தி உள்ள ஒருவன் மிரட்டினால் (தன் விருப்பமின்றி) நாவால் கூறுவது குற்றமல்ல. அல்லாஹ் மன்னிப்பான். (யா அல்லாஹ் எங்களின் ஈமானை பாதுகாப்பாயாக.)

## பாடம் – 15 பாவங்கள்

**கேள்வி :** பாவங்கள் என்றால் என்ன?

**பதில் :** அல்லாஹ்வுக்கு மாறு செய்வதற்கு பாவம் என்று சொல்லப்படும்.

**கேள்வி :** பாவங்கள் எத்தனை வகைப்படும்.

**பதில் :** பாவங்கள் இருவகைப்படும். 1. சிறு பாவங்கள், 2. பெரும் பாவங்கள் இரண்டும் செய்வது கூடாது.

**கேள்வி :** பெரும் பாவங்கள் எத்தனை வகைப்படும்?

**பதில் :** மூன்று வகைப்படும்.

1. இணைவைத்தல் . இது மிகப் பெரும் பாவம். இதற்கு மன்னிப்பே கிடையாது. திரும்ப முஸ்லிமானால் மன்னிப்பு கிடைக்கும்.

2. அடியார்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளை செய்யாமல் இருப்பது.

3. அல்லாஹ்வுடைய கட்டளைகளை செய்யாமல் இருப்பது.

**கேள்வி :** பாவங்கள் எத்தனை உள்ளது.

**பதில் :** பாவம் அதிகம் உள்ளன. அவற்றில் சில பின்வருமாறு.

1. அல்லாஹ், இன்னும் அவனது இரசூல்களுக்கு மாறு செய்வது
2. பெற்றோர்களுக்கு மாறு செய்வது.
3. கொலை செய்வது.
4. பொய் சொல்வது.
5. பொய் சத்தியம் செய்வது ; 6. பொய் சாட்சி சொல்லுவது
7. வட்டி -லஞ்சம் வாங்குவது
8. சூதாட்டம் - லாட்டரி
9. செய்வினை செய்யுதல்
10. திருடுதல் ; 11. அநியாயம் செய்வது
12. அபகரிப்பது.
13. உண்மை சாட்சியை மறைப்பது
14. குழப்பம் செய்வது
15. முஸ்லிம்களின் குறையை தேடுவது
16. நிர்வாண மாகுதல்
17. இட்டுக்கட்டுதல்
18. அனாதைகளின் பொருளை அபகரிப்பது.
19. போதை பொருள் உபயோகிப்பது.
20. இசை கேட்பது.; 21. நடனத்தை பார்ப்பது.
22. தற்கொலை செய்வது.
23. ஸஹாபாக்களை குறை கூறுவது.
24. பாவத்திற்கு உதவியாக இருப்பது.
25. குறி சொல்லக் கூடியவனின் பேச்சை நம்புவது.

**கேள்வி :** பெரும் பாவம் செய்வதால் என்ன விபரீதம் ஏற்படும்.

**பதில் :** பெரும் பாவம் என தெரிந்து கொண்டே பாவம் செய்பவன் பெரும் பாவியாகி விடுகிறான். பாவத்தை பாவமில்லை என்று கூறி பாவத்தை செய்தால் ஈமான் அழிந்து விடுகின்றது.

பெரும் பாவம் செய்து விட்டால் (தவ்பா) பாவ மன்னிப்பு கேட்டாக வேண்டும். சிறு பாவங்களை அல்லாஹ் நாடினால் மன்னித்து விடுவான். அடியார்களுக்குரிய பாவங்கள் செய்து விட்டால் அவர்களிடம் மன்னிப்பு கேட்க வேண்டும்.

பகுதி 2

# இஸ்லாமிய வணக்கங்கள்

## பாடம் 1

## இஸ்லாத்தின் அடிப்படைக்கடமைகள்

**கேள்வி:** பர்ளு என்றால் என்ன?

**பதில்** : அல்லாஹ்வின் சட்டத்தில் எது உறுதிமிக்க ஆதாரத்தைக் கொண்டு நிரூபணமாகிருக்கிறதோ அதற்கு பர்ளு என்று சொல்லப்படும்.

**கேள்வி** : பர்ளுடைய சட்டம் என்ன?

**பதில்** : கண்டிப்பாக செய்ய வேண்டும். இதை செய்வதால் நன்மை கிடைக்கிறது . இதை விட்டு விட்டால் தண்டனை கிடைக்கும். பர்ளை மறுப்பவன் முஸ்லிமாக இருக்க முடியாது.

**கேள்வி** : வாஜிபு என்றால் என்ன?

**பதில்** : பர்ளுக்கு அடுத்த அந்தஸ்தில் உள்ளதற்கு வாஜிப் என்று சொல்லப்படும். வாஜிபை மறுப்பது பெரும் பாவமாகும். வாஜிபை விட்டு விட்டாலும் அதை களா செய்வது ( பூர்த்தியாக்குவது ) அவசியமாகும்.

**கேள்வி** : சுன்னத் என்றால் என்ன?

**பதில்** : நம் நபி அவர்கள் கண்டிப்புடன் செய்யச் சொன்னது தானும் அதைச் செய்திருக்கிறார்கள். அத்தகைய செயலுக்கு சுன்னத் எனப்படும். சுன்னத்தை செய்தால் நன்மை கிடைக்கும். நபி பெருமானார் (ஸல்) அவர்கள் சிபாரிசு செய்வார்கள். சுன்னத்தை செய்யாவிட்டால் கேள்விகணக்கு உண்டு. ஆனால் தண்டனை இல்லை இருப்பினும் நபி பெருமானர் (ஸல்) அவர்கள் சிபாரிசு செய்யமாட்டார்கள். சுன்னத்தை மறுப்பவன் பாவியாகவும் வழிகெட்டவனாகவும் இருக்கிறான்.

**கேள்வி** : இஸ்லாத்தின் அடிப்படையான கடமைகள் எத்தனை?

**பதில்** : ஐந்து அடிப்படைக் கடமைகள் இருக்கிறது. 1. கலிமா, 2. தொழுகை, 3. நோன்பு, 4. ஜக்காத், 5. ஹஜ்

**கேள்வி** : தொழுகை யாரின் மீது கடமை?

**பதில்** : வயது வந்த ஆண், பெண் இருபாலரின் மீதும் கடமையாகும். ஏழு வயது ஆகிவிட்டால் தொழுக ஆரம்பிக்க வேண்டும்.10 வயது ஆகியும் தொழுகாத பிள்ளைகளை அடிக்கலாம்.

## பாடம் - 2 குளிப்பின் விளக்கம்

**கேள்வி :** எப்படி குளிக்க வேண்டும்?

**பதில் :** முதலில் இரு கையை மணிக் கட்டுவரை கழுவ வேண்டும். பிறகு மலம், ஜலம் வந்தால் கழிக்க வேண்டும். ஏதாவது அசுத்தம் உடலில் பட்டிருந்தால் அதை கழுவ வேண்டும். வாய் கொப்பளிக்க வேண்டும். நாசிக்கு நீர் செலுத்த வேண்டும். பிறகு முழு உறுப்புகளின் மீதும் கொஞ்சமான தண்ணீர் ஊற்ற வேண்டும். பிறகு உடம்பை தேய்க்க வேண்டும். சோப்பு போட விரும்பினால் போடலாம். அதற்கு பின் மும்முறை உடம்பு முழுவதும் தண்ணீர் ஊற்ற வேண்டும். குளிக்கும் சமயத்தில் ஆடையில்லாமல் இருக்க கூடாது.

**கேள்வி :** குளிப்பின் கடமைகள் எத்தனை?

**பதில் :** மூன்று 1. வாய் கொப்பளிப்பது, 2. நாசிக்கு தண்ணீர் செலுத்துவது 3. உடம்பு முழுவதும் நீர் ஊற்றுவது.

**கேள்வி :** குளிப்பின் சுன்னத்துக்கள் எத்தனை?

**பதில் :** ஐந்து 1. இரு கைகளையும் மணிக்கட்டு வரை மூன்று முறை கழுவுதல், 2. அசுத்தம் பட்ட இடத்தை கழுவுதல் , 3. நிய்யத் செய்தல், 4. உளு செய்யுதல், 5. உடல் முழுவதும் தண்ணீரை ஊற்றுதல்

**கேள்வி :** குளிப்பின் வகைகள் எத்தனை ?

**பதில் :** மூன்று 1. பர்ளான குளிப்பு ,2. வாஜிபான குளிப்பு 3. சுன்னத்தான குளிப்பு .

**கேள்வி :** பர்ளான குளிப்பு எது?

**பதில் :** பெரும் தொடக்கு ஏற்பட்டு விட்டால் குளிப்பது கடமையாகும். ( இதை பற்றி பெரிய புத்தகங்களில் விவரமாக வரும்). பெரும் தொடக்கு ஏற்பட்டவர் குளிக்காமல், தொழுவது, குர்ஆனை தொடுவது, ஓதுவது, பள்ளிவாசலுக்கு செல்வது, கஃபாவை வலம் சுற்றி வருவது கூடாது.

**கேள்வி :** வாஜிபான குளிப்பு எது?

**பதில் :** மய்யித்தை (பிரேதம்) குளிப்பாட்டுவது வாஜிபாகும். ஷஹீதாக இருந்தால் குளிப்பாட்டுவது கூடாது.

**கேள்வி :** சுன்னத்தான குளிப்புகள் எது?

**பதில் :** 1. ஜும்ஆ தொழுகைக்காக குளிப்பது, 2. ஈது

தொழுகைக்காக குளிப்பது, 3. ஹஜ்ஜுடைய இஹ்ராம் உடைய ஆடை அணிவதற்கு முன்னால் 4. அரபாமைதானத்தில் தங்குவதற்காக சூரியன் உச்சியிலிருந்து பிறகு குளிப்பது.

## பாடம் - 3 உளுவின் விளக்கம்

**கேள்வி :** உளு இல்லாமல் தொழுக முடியுமா?

**பதில்** : உளு இல்லாமல் தொழுதால் தொழுகை கூடாது.

**கேள்வி :** உளுவின் பர்ளுகள் எத்தனை?

**பதில்** : உளுவின் பர்லுகள் நான்கு

1. முகத்தை அடைய வளைந்து கழுவுதல்
2. இரு கைகளையும் முழங்கை ( மொளி) உள்பட கழுவுதல்.
3. நான்கில் ஒரு பகுதியை தலைக்கு மஸஹ் செய்தல்
4. கரண்டை மொளி உட்பட இரண்டு கால்களையும் கழுவுவது.

**கேள்வி :** உளுவின் சுன்னத்துக்கள் எத்தனை?

**பதில்** : உளுவின் சுன்னத்துக்கள் 13

1. நிய்யத் செய்வது,
2. ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹ் சொல்வது
3. மணிக்கட்டு வரை கையை கழுவுவது ,
4. பல் துலக்குவது.
5. மூன்று முறை வாய் கொப்பளிப்பது.
6. மூன்று முறை நாசிக்கு தண்ணீர் செலுத்துவது.
7. ஒவ்வொரு உறுப்பை மூன்று முறை கழுவுவது.
8. தலைமுழுவதும் ஒருமுறை மஸஹு செய்வது.
9. இரு காதுகளுக்கு மஸஹு செய்வது.
10. அடர்ந்த தாடியை கோதி கழுவுவது.
11. விரல்களை கோதுவது.
12. வரிசையாக செய்வது.
13. தொடர்படியாக செய்வது.

**கேள்வி :** உளுவின் முறித்தல்கள் என்னென்ன?

**பதில்** : உளுவின் முறித்தல்கள் பல உள்ளன. அதில் சில வருமாறு.

1. சிறுநீர் கழிப்பது.

2. மலம் கழிப்பது.

3. காற்று வெளியாகுவது.

4. உடம்பில் இருந்து இரத்தம் சீழ் வடிந்தோடுதல்,

5. வாய் நிரம்பிய நிலையில் வாந்தி எடுப்பது.

6. மயக்கமாகுதல்

7. சாய்ந்து தூங்குவது.

8. தொழுகும் போது வெடிச் சிரிப்பு சிரிப்பது.

**கேள்வி :** உளு இல்லாதவர்கள் செய்யக் கூடாதவைகள் என்னென்ன?

**பதில்** : 1. தொழக் கூடாது 2. திருக்குர்ஆனை தொடக்கூடாது. 3. தவாஃப் செய்யக் கூடாது.

**கேள்வி :** உளு எப்படி செய்ய வேண்டும்?

**பதில்** : 1.சுத்தமான பாத்திரத்தில் தண்ணீரை எடுத்து கிப்லாவை முன்நோக்கி உயரமான இடத்தில் உட்கார வேண்டும்.

2. பிஸ்மில்லாஹ் சொல்லி மூன்று முறை மணிக்கட்டு வரை கையை கழுவ வேண்டும்.

3. பிறகு மூன்று முறை வாயை கொப்பளிக்க வேண்டும்.

4. மிஸ்வாக்குச்சியினால் பல் துலக்க வேண்டும். இல்லாவிட்டால் விரலால் தேய்க்க வேண்டும்.

5. பிறகு மூன்று முறை நாசிக்கு தண்ணீர் செலுத்த வேண்டும்.

6. இடதுகை சுண்டு விரலை க்கொண்டு மூக்கை சுத்தம் செய்ய வேண்டும்.

7. பிறகு மூன்று தடவை முகம் கழுவ வேண்டும்.

8. பின்பு முழங்கை வரை மூன்று முறை கைகளைக்கழுவ வேண்டும்.

9. பின்பு கையை நனைத்து தலைக்கு ஒரு முறை மஸஹ் செய்ய வேண்டும்.

10. பின்பு பிடரிக்கு மஸஹ் செய்ய வேண்டும்.

11. பிறகு இரண்டு கால்களையும் கரண்டை மொளி உட்பட கழுவ வேண்டும்.

## பாடம் - 4 தயம்மும் (தயம்மம்)

**கேள்வி :** தயம்மும் என்றால் என்ன?

**பதில் :** தண்ணீர் கிடைக்காத போது அல்லது தண்ணீரை உபயோகித்தால் நோய் வந்து விடும் என்றோ அல்லது இருக்கும் நோய் அதிகமாகி விடும் என்றோ கருதினால் சுத்தமான மண்ணில் இரண்டு கைகளையும் அடித்து முகத்தில் தடவி பிறகு மண்ணில் கையை அடித்து இரண்டு கைகளையும் மொளி உள்பட தடவுவது, நிய்யத் செய்வது, அவசியம். இதற்கு தான் தயம்மும் என்று சொல்லப்படும்.

## பாடம் - 5

## அசுத்தங்கள் பற்றிய விளக்கம்

**கேள்வி :** அசுத்தம் உடம்பில் அல்லது ஆடையில் பட்டு விட்டால் என்ன செய்வது?

**பதில் :** மிகக் கடுமையான அசுத்தமான பொருள்கள் கெட்டியானதாக இருந்தால் நான்கு கிராம் 374 மி.கிராம் அளவு பட்டு விட்டால் திரவம் போல் இருக்கக் கூடிய அசுத்தம் ஒரு ரூபாய் நாணயம் அளவு பட்டு விட்டால் கழுவுவது கடமையாகும். மேற்கூறிய அளவைவிட குறைவாக பட்டு விட்டால் அதை கழுவுவது சுன்னத்தாகும். கடுமையில்லாத அசுத்தம் ஆடையிலோ, உடம்பிலோ அதன் நான்கில் ஒரு பங்கு பட்டு விட்டால் அதை கழுவுவது பர்ளாகும். அதை விடக் குறைவாகப் பட்டிருந்தால் கழுவுவது சுன்னத்தாகும்.

**கேள்வி :** கடுமையான அசுத்தங்கள் எது?

**பதில் :** மனிதனின் மலம் மற்றும் ஜலம் ஹராமாக்கப்பட்ட மிருகங்களின் சாணம், விட்டை, சிறுநீர் ஹலாலான மிருகங்களின் சாணி, புலுக்கை, கோழி , வாத்தினுடைய மலம், இரத்தம், மது, பன்றி.

**கேள்வி :** கடுமையில்லாத அசுத்தம் என்றால் என்ன?

**பதில் :** கடுமையில்லாத அசுத்தம் என்றால் ஹலாலான மிருகங்களின் சிறுநீர், ஹராமான பறவையின் மலம்.

## பாடம் - 6 பாங்கினுடைய விளக்கம்

**கேள்வி :** பாங்கு என்றால் என்ன?

**பதில் :** தொழுகைக்காக அழைப்பதற்கு கூறப்படும் வாசகத்துக்கு பாங்கு என்று சொல்லப்படும், 5 நேரத் தொழுகை மற்றும் ஜும்

ஆவுக்கு பாங்கு சொல்வது கண்டிப்பான சுன்னத் ஆகும்.

**கேள்வி** : பாங்கிற்கு பதில் சொல்வது என்றால் என்ன?

பதில் : ஒவ்வொரு வார்த்தையை கேட்கும் போதும் நாமும் அதே போன்றே வார்த்தையை சொல்லவேண்டும். " **ஹைய்ய அலஸ்ஸலாத்** , **ஹைய்ய அலல்ஃபலாஹ்** என்று சொல்லும் போது **லாஹவ்ல வலாகுவ்வத்த இல்லா பில்லாஹ்** என்று சொல்ல வேண்டும். பஜ்ரில் **அஸ்ஸலாத்து ஹைரும் மினன்னவ்ம்** என்று சொல்லும் போது ஸதக்த வபரர்த்த என்று சொல்ல வேண்டும்.

**கேள்வி** :பாங்கு சொல்லி முடித்தவுடன் என்ன துஆ ஓத வேண்டும்?

பதில் : **அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் வFபாரிக் வஸல்லிம்** என்று கூறி விட்டு இந்த ஓஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلَاةِ
الْقَائِمَةِ اٰتِ سَيِّدَنَا مُحَمَّدَنِ الْوَسِيْلَةَ
وَالْفَضِيْلَةَ وَالدَّرَجَةَ الرَّفِيْعَةَ وَابْعَثْهُ
مَقَامًا مَحْمُوْدَنِ الَّذِيْ وَعَدْتَّهٗ وَارْزُقْنَا
شَفَاعَتَهٗ يَوْمَ الْقِيٰمَةِ اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ

அல்லாஹும்ம ரப்ப ஹாதிஹித்தஅவதித் தாம்மத்தி வஸ்ஸலாத்தில், காஇமதி, ஆதி, சைய்யினா, முஹம்மதனில் வஸீலத்த வல்Fபஸீலத்த , வப்அஸ்ஊஜ் மகாமம், மஹ் மூதனில்லதீ வஅத்தஹு வர்ஜுக்னா ஷஃபாஅதஹு யவ்மல் கியாமத்தி இன்னக்க லா துஹ்லிஃபுல் மீஆத்.

## பாடம் – 7 தொழுகையின் விளக்கம்

கேள்வி : முஸ்லிம்கள் எப்படி அல்லாஹ்வை வணங்குகிறார்கள்?

பதில் : தொழுகிறார்கள், நோன்பு நோற்கிறார்கள், ஜக்காத் கொடுக்கிறார்கள், ஹஜ் செய்கிறார்கள்.

கேள்வி : எத்தனை தடவை தொழுவது கடமை?

பதில் : ஐந்து நேரம் தொழுவது கடமையாகும் 1. பஜ்ரு, 2. லுஹர், 3. அஸர், 4. மஃரிப் , 5.இஷா .

**கேள்வி :** தொழுகையின் ரக்அத்துக்களை விரிவாக கூறுக?

| **பதில் :** | **முன்சுன்னத்** | **பர்ளு** | **பின் சுன்னத்** | **நபில் வாஜிப்** |
|---|---|---|---|---|
| பஜ்ரு | 2 | 2 | - | - |
| லுஹர் | 4 | 4 | 2 | - |
| அஸர் | 4 | 4 | இல்லை | - |
| மஃரிப் | இல்லை | 3 | 2 | 2 |
| இஷா | 4 | 4 | 2 | 2<br>வித்ரு3 |
| ஜும்ஆ | 4 | 2 | 4 | 2 |

## பாடம் - 8 தொழுகையின் பர்ளுகள்

**கேள்வி :** தொழுகையின் பர்ளுகள் எத்தனை?

**பதில்** : உள்பர்ளு ஏழு, வெளி பர்ளு ஏழு ஆக மொத்தம் பதினான்கு.

**வெளி பர்ளுகள் :** 1. உடல் சுத்தம், 2. உடை சுத்தம், 3. இடம் சுத்தம், 4. மறைவிடங்களை மறைப்பது 5. நேரம் அறிவது , 6. கிப்லாவை முன்நோக்குவது. 7. நிய்யத் செய்வது.

**உள் பர்ளுகள்** : 1. அல்லாஹு அக்பர் என்று சொல்லுவது 2. நிற்பது 3. ஓதுவது. 4. ருகூவு செய்வது , 5. ஸஜ்தா செய்வது, 6.கடைசி இருப்பு இருப்பது 7. தொழுகையிலிருந்து வெளியாகுவதை நாடுவது மேற்கூறிய பர்ளுகளில் ஏதேனும் ஒன்றை விட்டாலும் தொழுகை கூடாது.

## பாடம்- 9 தொழுகையின் வாஜிபுகள்

**கேள்வி :** தொழுகையின் வாஜிபுகள் எத்தனை?

**பதில்** : பதினான்கு வாஜிபுகள் உள்ளது. இதனுடைய விளக்கம் பெரிய கிதாபுகளில் வரும். வாஜிபுகளை வேண்டுமென்றே விட்டு விட்டால் தொழுகை கூடாது. மறந்து விட்டு விட்டால் ஸஜ்தா ஸஹ்வு செய்ய வேண்டும்.

கேள்வி : ஸஜ்தா ஸஹ்வு என்றால் என்ன?

பதில் : கடைசி இருப்பில் அத்தஹிய்யாத்து ஓதிய பிறகு வலது பக்கம் ஸலாம் கொடுத்து விட்டு இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். பின்பு அமர்ந்து அத்தஹிய்யாத்து, ஸலவாத்து, துஆ ஓதி இரு பக்கமும் ஸலாம் கொடுக்க வேண்டும்.

## பாடம்-10

## தொழுகையின் சுன்னத்துக்கள்

கேள்வி: தொழுகையின் சுன்னத்துக்கள் எத்தனை?

பதில் : 21 சுன்னத்துக்கள் உள்ளன.

கேள்வி : சுன்னத்துகளை விட்டு விட்டால் தொழுகை கூடுமா?

பதில் : தொழுகை கூடிவிடும்.

கேள்வி : ஸஜ்தா ஸஹ்வு செய்ய வேண்டுமா?

பதில் : செய்ய வேண்டியதில்லை.

## பாடம் - 11

## தொழுகையின் முறித்தல்கள்

கேள்வி : தொழுகையை முறிக்கக் கூடிய செயல்கள் எத்தனை?

பதில் : நிறைய இருக்கின்றன. அதில் சில வருமாறு:

1. உளு முறிந்து விடுவது, 2. பேசுவது, 3. சப்தமிட்டு சிரிப்பது. 4. கிப்லாவை விட்டு திரும்பி விடுவது. 5. ஸலாம் சொல்வது 6. ஸலாத்திற்கு பதில் சொல்லுவது 8. கவலையான செய்தி கேட்டு இன்னா லில்லாஹ் சொல்வது 9. தும்மியவர் அல்ஹம்து லில்லாஹ் சொல்வதை கேட்டு யர்ஹமு கல்லாஹ் என்று சொல்லுவது. 10. மறைவிடம் வெளியே தெரிவது.

## பாடம் - 12 ஸஜ்தா திலாவத்

கேள்வி : ஸஜ்தா திலாவத் என்றால் என்ன?

பதில் : திரு குர் ஆனில் சிலஆயத்தை ஓதும் போது ஸஜ்தா செய்வது அவசியமாகும். அதற்கு ஸஜ்தா திலாவத் என்று சொல்லப்படும்.

கேள்வி : முழு குர் ஆனிலும் எத்தனை ஸஜ்தாக்கள் உள்ளன?

பதில் : பதினான்கு ஸஜ்தாக்கள் உள்ளன.

**கேள்வி :** டேப்ரிக்கார்டரில் ஸஜ்தா ஆயத் ஓதுவதை கேட்டால் ஸஜ்தா செய்ய வேண்டுமா?

**பதில்** : ஸஜ்தா செய்ய வேண்டியதில்லை.

**கேள்வி :** ஸஜ்தா செய்வதின் முறை என்ன?

**பதில்** : உளுவுடன் அல்லாஹு அக்பர் என்று சொல்லி ஸஜ்தாவுக்கு போக வேண்டும். சுப்ஹான ரப்பியல் அஃலா என்று மூன்று முறை சொல்ல வேண்டும். பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லி எழுந்து விட வேண்டும்.

## பாடம் – 13 தொழுகும் முறை

**கேள்வி :** தொழுவதின் முறை என்ன?

பதில் உளு செய்து விட்டு கிப்லாவை முன்நோக்கி இன்ன தொழுகை தொழுகிறேன் என்று நிய்யத் செய்து கொண்டு, இரு கைகளையும் காது வரை உயர்த்தி அல்லாஹு அக்பர் என்று சொல்லி தொப்புளுக்குக் கீழே கைகளை கட்டிக் கொள்ள வேண்டும். பிறகு தனா, பிறகு அஊது, பிறகு பிஸ்மில்லாஹ் ஓதி அல்ஹம்து சூரா ஓத வேண்டும். அதற்கு பிறகு ஏதேனும் ஒரு சூரா ஓத வேண்டும். பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லி ருகூவில் போக வேண்டும். மூன்று முறை சுப்ஹான ரப்பியல் அழீம் என்று ஓதி விட்டு ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா என்று சொல்லி நிற்க வேண்டும்.

நின்று ரப்பனா லகல்ஹம்து என்று சொல்ல வேண்டும். பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லி ஸஜ்தாவுக்கு போக வேண்டும். ஸுப்ஹான ரப்பியல் அஃலா என்று சொல்லி பின்பு அல்லாஹு அக்பர் என்று சொல்லி விட்டு எழுந்து அமர வேண்டும். பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லி இரண்டாவது ஸஜ்தா செய்ய வேண்டும். பிறகு அல்லாஹ் அக்பர் என்று எழுந்து நிற்க வேண்டும். பிறகு தனா ஓதக் கூடாது. அல்ஹம்து மற்றும் துணை சூரா ஓத வேண்டும்.

இரண்டாவது ரக அத்தில் இரண்டாவது ஸஜ்தாவிலிருந்து எழுந்து அமர்ந்து அத்தஹிய்யாத்து ஓத வேண்டும். பிறகு ஸலவாத்து பிறகு துஆ ஓதி ஸலாம் கொடுக்க வேண்டும். நான்கு ரக் அத்தாக இருந்தால் அத்தஹிய்யாத்து ஓதியவுடன் அல்லாஹு அக்பர் என்று சொல்லி எழுந்து மூன்றாவது, நான்காவது ரக்அத்தை நிறைவு செய்ய வேண்டும். பர்ளு தொழுகையில் மூன்றாவது, நான்காவது

ரக்அத்தில் அல்ஹம்து மட்டும் ஓத வேண்டும்.

துணை சூரா ஓதக் கூடாது. தொழுது முடித்த பிறகு நெஞ்சு வரை இரு கைகயையும் உயர்த்தி துஆ செய்ய வேண்டும். இமாமை பின்பற்றி தொழுகும் போது அல்ஹம்து மற்றும் சூரா ஓதக் கூடாது. மௌனமாக நிற்க வேண்டும். **குறிப்பு: தொழுகும் முறையை ஆசிரியர் அவர்கள் செய்து காட்டு வார்கள். கவனிக்கவும்.**

**கேள்வி** : தொழுகையில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வித்தியாசம் உண்டா?

**பதில்** : பத்து வித்தியாசங்கள் உண்டு.

1. பெண்கள் முதல் தக்பீர் சொல்லும் போது இரு கைகளையும் புஜம் வரை உயர்த்தினால் போதும்.
2. கையை நெஞ்சில் கட்ட வேண்டும்.
3. நிற்கும் போது இரு கால்களும் சேர்ந்திருக்க வேண்டும்.
4. ருகூவில் லேசாக குனிந்தால் போதும்.
5. ருகூவில் இரு முழங்காலும் சேர்ந்திருக்க வேண்டும்.
6. ஸஜ்தாவில் நன்றாக தரையில் சேர்ந்து விட வேண்டும்.
7. இருப்பில் இடது பக்கமாக சாய்ந்து உட்கார வேண்டும்.
8. கிரா அத் சப்தமிட்டு ஓதக்கூடாது.
9. நிற்கும் போது, ருகூவில், ஸஜ்தாவில், இருப்பில் கை விரல்களை நன்றாக சேர்த்து வைக்க வேண்டும்.
10. பெண்கள் ஜமா அத்தாக தொழக் கூடாது. தனித் தனியாகத் தான் தொழ வேண்டும்.

## பாடம் - 14

## தொழுகையில் ஓதுபவைகள்

**கேள்வி** : தக்பீர் என்றால் என்ன?

**பதில்** : اَللّٰهُ اَكْبَرُ

அல்லாஹு அக்பர் என்று கூறுவது.

**கேள்வி** : தனா என்றால் என்ன?

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ وَتَعَالٰى جَدُّكَ وَلَا اِلٰهَ غَيْرُكَ.

பதில்:

கேள்வி : அஊது என்றால் என்ன?

பதில்: اَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ

கேள்வி : பிஸ்மில்லாஹ் என்றால் என்ன?

பதில்: بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

கேள்வி : அல்ஹம்து சூரா என்றால் என்ன?

பதில்:

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ ۝

الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝ مٰلِكِ يَوْمِ الدِّيْنِ ۝ اِيَّاكَ

نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ ۝ اِهْدِنَا الصِّرَاطَ

الْمُسْتَقِيْمَ ۝ صِرَاطَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ

غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ وَلَا الضَّآلِّيْنَ ۝

கேள்வி : ருகூவில் ஓதும் தஸ்பீஹ் என்ன?

பதில் : "سُبْحَانَ رَبِّيَ الْعَظِيمِ"

கேள்வி : தலையை உயர்த்தும் போது என்ன ஓதுவது?

பதில்: سَمِعَ اللّٰهُ لِمَنْ حَمِدَهْ

கேள்வி: ருகூவிலிருந்து எழுந்து நின்றபின் என்ன ஓதுவது?

பதில்: رَبَّنَا لَكَ الْحَمْدُ

கேள்வி: ஸஜ்தாவில் என்ன ஓத வேண்டும்?

பதில் : "سُبْحَانَ رَبِّيَ الْأَعْلٰى"

கேள்வி :அத்தஹிய்யாத் என்றால் என்ன?

பதில் :

اَلتَّحِيَّاتُ لِلّٰهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ
اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ
اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ
اَشْهَدُ اَنْ لَّا اِلٰهَ اِلَّا اللّٰهُ
وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ.

கேள்வி: ஸலவாத் என்றால் என்ன?

பதில்:

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ
عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

اَللّٰهُمَّ بَارِكْ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ
عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

கேள்வி: ஸலவாத்திற்கு பின் ஓதும் துஆ என்ன?

பதில்:

اَللّٰهُمَّ اِنِّىْ ظَلَمْتُ نَفْسِىْ ظُلْمًا كَثِيْرًا
وَلَا يَغْفِرُ الذُّنُوْبَ اِلَّا اَنْتَ
فَاغْفِرْلِىْ مَغْفِرَةً مِّنْ عِنْدِكَ
وَارْحَمْنِىْ اِنَّكَ اَنْتَ الْغَفُوْرُ الرَّحِيْمُ.

(அல்லது)

اَللّٰهُمَّ اغْفِرْلِىْ وَلِوَالِدَىَّ وَلِاُسْتَاذِىْ وَلِجَمِيْعِ الْمُؤْمِنِيْنَ
وَالْمُؤْمِنَاتِ وَالْمُسْلِمِيْنَ وَالْمُسْلِمَاتِ بِرَحْمَتِكَ يَا
اَرْحَمَ الرَّاحِمِيْنَ.

கேள்வி: ஸலாம் எவ்வாறு சொல்ல வேண்டும்?

பதில்: اَلسَّلَامُ عَلَيْكُمْ وَرَحْمَةُ اللّٰهِ

என்று சொல்ல வேண்டும்.

கேள்வி : ஸலாம் கொடுத்த பின் ஓதும் சுன்னத்தான துஆ என்ன?

பதில் :

اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ تَبَارَكْتَ يَا ذَالْجَلَالِ وَالْاِكْرَامِ.

கேள்வி : குனூத்து ( ஹனபி) என்றால் என்ன?

பதில் :

اَللّٰهُمَّ اِنَّا نَسْتَعِيْنُكَ وَنَسْتَغْفِرُكَ وَنُؤْمِنُ بِكَ وَنَتَوَكَّلُ عَلَيْكَ وَنُثْنِيْ عَلَيْكَ الْخَيْرَ كُلَّهُ وَنَشْكُرُكَ وَلَا نَكْفُرُكَ وَنَخْلَعُ وَنَتْرُكُ مَنْ يَّفْجُرُكَ اَللّٰهُمَّ اِيَّاكَ نَعْبُدُ وَلَكَ نُصَلِّيْ وَنَسْجُدُ وَاِلَيْكَ نَسْعٰى وَنَحْفِدُ وَنَرْجُوْ رَحْمَتَكَ وَنَخْشٰى عَذَابَكَ اِنَّ عَذَابَكَ الْجِدَّ بِالْكُفَّارِ مُلْحِقٌ

## பாடம் - 15 ஜமாஅத் - இமாமத்

கேள்வி : ஜமாஅத்துடன் தொழுவதின் சட்டம் என்ன?

பதில் : ஜும்ஆ தொழுகைக்காக ஜமாஅத் பர்ளாகும். மற்ற ஐந்து நேர தொழுகைகளுக்கு ஜமாஅத் சுன்னத் முஅக்கதாவாகும்.

கேள்வி : இமாமத்தின் சட்டம் என்ன?

பதில் : இமாமத் செய்பவர் வயதுக்கு வந்தவராக இருக்க வேண்டும். நல்ல விதமாக கிராஅத் ஓத தெரிந்திருக்க வேண்டும்.

தொழுகையின் சட்டங்களை அறிந்திருக்க வேண்டும். வயதுக்கு குறைவானவர்கள் இமாமத் செய்வது கூடாது.

**கேள்வி :** தொழுகை நடந்து கொண்டிருக்கும் போது இடையில் தொழுகையில் எப்படி சேர்வது ?

**பதில் :** நின்று அல்லாஹு அக்பர் என்று சொல்லி இமாமுக்கு பின்னால் சேர்ந்து கொள்ள வேண்டும். ருகூஉ கிடைத்துவிட்டால் அந்த ரகஅத்தை கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். இமாம் ஸலாம் கொடுத்த பிறகு விடுபட்ட தொழுகையை திரும்ப தொழ வேண்டும். அப்படி எழுந்து நின்று நிறைவேற்றும் போது தனா, அஊது, பிஸ்மி ஓதி கிராஅத் ஓத வேண்டும்.

## பாடம் – 16 பயணிகளின் தொழுகை

**கேள்வி :** பயணி என்பவர் யார்?

**பதில் :** எழுபத்தி ஏழு கிலோமீட்டர் அல்லது அதைவிட அதிக தூரம் பயணம் செய்பவருக்கு பயணி என்று சொல்லப்படும்.

கேள்வி : பயணியின் சட்டம் என்றால் என்ன?

பதில் :ஊர்திரும்பும் வரை தனியாக தொழுதால் நான்கு ரக் அத்துக்களை இரண்டு ரக் அத்தாக தொழுக வேண்டும். பஜ்ரு, மக்ரிப், சுன்னத் இவைகளிளெல்லாம் சலுகைகள் இல்லை. முடியாவிட்டால் சுன்னத்தை விடலாம். வெளியூரில் பதினைந்து நாட்களுக்கு மேல் தங்குவதாக இருந்தால் சொந்த ஊரில் இருப்பதைப் போன்று தான் தொழுக வேண்டும்.

## பாடம் – 17 ஜும்ஆ தொழுகை

**கேள்வி :** ஜும்ஆ தொழுகையை எவ்விதம் நிறைவேற்றுவது?

**பதில் :** ஜும்ஆ அன்றுகுளித்து ஆடையை மாற்றி அத்தர் (நறுமணம்) பூசி பள்ளிவாசலுக்குச் சென்று கிடைத்த இடத்தில் அமர வேண்டும். முன் சுன்னத் நான்கு ரகஅத் தொழுக வேண்டும். 1. இமாம் குத்பா ஓதும் போது அமைதியாக கேட்க வேண்டும். 2. பேசுவது கூடாது. 3. தொழுவது கூடாது. பர்ளு இரண்டு ரக்அத் பிறகு நான்கு ரக்அத் சுன்னத் தொழுத பிறகு இரண்டு ரக் அத் சுன்னத் பிறகு இரண்டு ரக் அத் நபில் தொழுக வேண்டும்.

## பாடம் – 18 பெருநாள் தொழுகை

**கேள்வி :** பெரு நாள் தொழுகையின் முறை என்ன?

**பதில் :** ஈது தொழுகை இரண்டு ரக்அத் அதிகமான ஆறு (6) தக்பீருடன் இந்த இமாமை பின் துயர்ந்து தொழுகிறேன் என்று நிய்யத் செய்ய வேண்டும். பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லி தக்பீர் சொல்ல வேண்டும். பிறகு (1) தனா ஓத வேண்டும். பிறகு அல்லாஹு அக்பர் என்று இரு கைகளையும் அவ்வாறே காது வரை உயர்த்தி கீழே விட வேண்டும். இரண்டாவது தடவையும் அவ்வாறே செய்ய வேண்டும். மூன்றாவது முறை அல்லாஹு அக்பர் என்று சொல்லி கைகளை கட்டிக் கொள்ள வேண்டும். பிறகு இமாம் கிராத் ஓதுவதைக் கேட்க வேண்டும்.

ஒரு ரக் அத் முடிந்ததும் இரண்டாவது ரக்அத்தில் இமாம் கிராஅத் ஓதி முடிந்ததும் மூன்று முறை தக்பீர் சொல்வார். நாமும் கூறி காது வரை கைகளை உயர்த்தி கீழே விட வேண்டும். நான்காவது முறை தக்பீர் சொல்லி ருகூவுக்கு செல்ல வேண்டும். தொழுகை முடிந்தவுடன் துஆ ஓத வேண்டும். பிறகு இமாம் குத்பா ஓதுவார். அதை அமைதியாக கேட்க வேண்டும்.

**கேள்வி :** தக்பீர் என்றால் என்ன?

اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ
وَاللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ

**பதில் :** துல்ஹஜ் பிறை ஒன்பது(9) பஜ்ரிலிருந்து பிறை பதிமூன்று, அஸர் முடிய பர்ளு தொழுகைக்கு பிறகு தக்பீர் சப்தமிட்டு ஒரு முறை சொல்வது வாஜிபாகும்.

## பாடம் – 19 தராவீஹ் தொழுகை

**கேள்வி :** தராவீஹ் தொழுகை பர்ளா? சுன்னத்தா?

**பதில் :** வயது வந்த ஆண், பெண் அனைவருக்கும், சுன்னத்முஅக் கதாவாகும்.

**கேள்வி :** எத்தனை ரக் அத்துக்கள்?

**பதில் :** இருபது ரக் அத்துக்கள் தராவீஹில் ஒரு குர்ஆன் முடிப்பது சுன்னத்தாகும்.

**கேள்வி :** தராவீஹ் தொழ வைப்பதற்காக இவ்வளவு பணம் தர வேண்டும் என்று கேட்பது கூடுமா?

**பதில் :** கூடாது. இப்படிப்பட்டவர்களுக்கு பின்னால் தொழுவதை விட இமாமே அலம்தரகைப ஓதி தொழ வைப்பது ஏற்றமானதாகும்.

## பாடம் - 20 மைய்யித்தின் சட்டங்கள்

**கேள்வி :** ஒரு முஸ்லிம் மரணித்து விட்டால் என்ன செய்ய வேண்டும்?

**பதில் :** 1. குளிப்பாட்டி கபனிட்டு, 2. தொழுகை வைத்து, 3. அந்த மைய்யித்தை அடக்கம் செய்ய வேண்டும்.

**கேள்வி :** ஜனாஸா தொழுகையின் பர்ளுகள் எத்தனை?

**பதில் :** ஜனாஸா தொழுகையின் பர்ளுகள் மூன்று 1. நிய்யத் செய்வது, 2. கிப்லாவை முன்னோக்குவது, 3. நான்கு தக்பீர் சொல்வது.

**கேள்வி :** ஜனாஸா தொழுகையின் சுன்னத்துக்கள் எத்தனை?

**பதில் :** ஜனாஸா தொழுகையின் சுன்னத்துக்கள் மூன்று 1. முதல் தக்பீருக்கு பின் தனா ஓதுவது. 2. இரண்டாவது தக்பீருக்கு பின் ஸலவாத்து ஓதுவது. 3. மூன்றாவது தக்பீருக்கு பின் துஆ செய்வது.

அந்த துஆ வருமாறு :

اَللّٰهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنا وَشَاهِدِنَا وَغَائِبِنا
وَصَغِيْرِنا وَكَبِيْرِنا وَذَكَرِنَا وَاُنْثَانَا اَللّٰهُمَّ مَنْ
اَحْيَيْتَهُ مِنَّا فَاَحْيِهِ عَلَى الاِسْلَامْ وَمَنْ تَوَفَّيْتَهُ
مِنَّا فَتَوَفَّهُ عَلَى الْاِيْمَانْ

ஆண் குழந்தையாக இருந்தால் இந்த துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ اجْعَلْهُ لَنَا فَرَطًا وَّاجْعَلْهُ لَنَا اَجْرًا وَّذُخْرًا وَّاجْعَلْهُ لَنَا شَافِعًا وَّمُشَفَّعًا

பெண் குழந்தையாக இருந்தால் இந்த துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ اجْعَلْهَا لَنَا فَرَطًا وَّاجْعَلْهَا لَنَا اَجْرًا وَّذُخْرًا وَّاجْعَلْهَا لَنَا شَافِعَةً وَّمُشَفَّعَةً

## பாடம் – 21

## ஜக்காத்தினுடைய விளக்கம்

**கேள்வி :** ஜக்காத்தினுடைய விளக்கம்.

**பதில் :** 612 கிராம் வெள்ளி மதிப்பளவு அசையும் சொத்து வைத்திருப்பவர்கள். வருடத்திற்கு ஒரு முறை நூறு ரூபாய்க்கு ரூ. 2.50 பைசா வீதம் வசதியில்லாத ஏழை எளியவர்களுக்கே கொடுக்க வேண்டும்.

**கேள்வி :** பெண்கள் அணிந்திருக்கும் நகைகளுக்கு ஜக்காத் உண்டா?

**பதில் :** 10 1/2 பவுனுக்கு மேல் இருந்தால் ஜக்காத் கொடுக்க வேண்டும்.

## பாடம் – 22

## ஸதக்கத்துல் பித்ரு மற்றும் குர்பானி

**கேள்வி :** ஸதக்கத்துல் பித்ரு, குர்பானி , யார்மீது அவசியம்?

**பதில் :** ஒரு வருடம் **பெருநாள்** அன்று ஜக்காத் கடமையாகும் அளவு அசையும் சொத்தாகவோ, அசையாத சொத்தாகவோ வைத்திருந்தால் குர்பானி கொடுப்பதும் கடமை. கடமையானவர் தனக்கும் தனது குழந்தைக்கும் ஸதக்கத்துல் பித்ரு கொடுப்பதும் கடமை.

**கேள்வி :** ஸதக்கத்துல் பித்ரு எவ்வளவு கொடுக்க வேண்டும்.

**பதில் :** ஒரு கிலோ 600 கிராம் கோதுமையோ, அதன்

கிரயத்தையோ , ஏழைகளுக்கு கொடுக்க வேண்டும்.

**கேள்வி :** அதை எப்பொழுது கொடுக்க வேண்டும்?

**பதில்** : ஈது தொழுகைக்குச் செல்வதற்கு முன்னால் கொடுப்பது சுன்னத்தாகும். முடியாவிட்டால் தொழுத பிறகு கொடுக்க வேண்டும்.

**கேள்வி :** குர்பானியின் சட்ட திட்டங்கள் என்ன?

**பதில்** : துல்ஹஜ், பிறை 10 த்திலிருந்து பிறை 12 மஃரிபு வரை குர்பானி கொடுக்கலாம்.

ஆடாக இருந்தால் ஒரு வருடமாகியிருக்க வேண்டும். குருடு, நொண்டி, நோய் இல்லாத ஆடாக இருக்க வேண்டும். மாடு 2 வருடமாக இருத்தல் வேண்டும். ஒட்டகம் ஐந்து வயது பூர்த்தியாகி இருக்க வேண்டும். மாடு ஒட்டகத்தில் 7 பேர் கூட்டு குர்பானி சேர்ந்து கொள்ளலாம்.

## பாடம் -23 நோன்பு

**கேள்வி :** நோன்பு யாருக்கு கடமை?

**பதில்** : வயது வந்த சுகமாக உள்ள ஆண்கள், பெண்கள் இரு பாலாரின் மீதும் நோன்பு வைப்பது கடமையாகும். ரமலான் மாதம் முழுவதும் வைக்க வேண்டும்.

**கேள்வி :** நோன்பு எத்தனை வகைப்படும்?

**பதில்** : மூன்று வகைப்படும்.

1. பர்ளு - ரமலான் மாத நோன்பு
2. வாஜிபு - நேர்ச்சை நோன்பு
3. நபில் நோன்பு -முஹர்ரம் 9-10 அல்லது 10-11 துல்ஹஜ் பிறை 9, ஷஃபான் 15, ஷவ்வாலில் பிறை 2 முதல் 7 வரை ஆறு நோன்புகள் நோற்பது இவைகள் எல்லாம் நபிலான நோன்பாகும். இது போன்று மாதம் தோறும் பிறை 13,14,15 நோன்பு நோற்பது திங்கள், வியாழன், நோன்பு நோற்பது சிறந்ததாகும்.

குறிப்பு: இரு ஈது பெருநாட்கள் மற்றும் துல்ஹஜ் பிறை 11-12-13 ஆகிய நாட்களில் நோன்பு வைப்பது ஹராமாகும்.

குறிப்பு: அதனை பற்றி முழு விளக்கம் பெரிய புத்தகத்தில் வரும். பார்த்து கொள்ளவும்.

## பாடம் – 24 ஹஜ்

**கேள்வி :** ஹஜ் யாருக்கு கடமை?

**பதில் :** வயதுக்கு வந்த புத்தி சுவாதீனமுள்ள , மக்கா சென்று வரும் அளவு வசதி படைத்த செல்வந்தர்கள் மீது ஹஜ் கடமையாகும்.

**கேள்வி :** ஹஜ்ஜின் பர்ளுகள் எத்தனை?

**பதில் :** ஹஜ்ஜின் பர்ளுகள் மூன்றாகும்

1. இஹ்ராம் கட்டுவது, 2. அரஃபா மைதானத்தில் தங்குவது, 3. கஃபாவை தவாப் செய்வது, (தவாப் என்றால் கப்பாவை வலம் சுற்றி வருவதாகும்.

**கேள்வி :** ஹஜ்ஜில் எத்தனை வாஜிபுகள் உள்ளன?

**பதில் :** ஹஜ்ஜில் வாஜிபுகள் 6 உள்ளன.

1. முஸ்தலிபாவில் தங்குவது,
2. ஸபா மர்வா, இதன் இடையில் ஓடுவது.
3. உம்ராவுக்கு செல்பவர் ஷைத்தானுக்கு கல்லு எறிவது
4. குர்பானி கொடுப்பது.
5. தலைமுடியை வெட்டுவது, துப்புரப்படுத்துவது.
6. கடைசி தவாப் செய்வது.

குறிப்பு : இதன் முழுமையான விபரங்கள் ஹஜ்ஜின் விளக்கம் என்ற பெரிய நூலில் விவரங்கள் வரும்.பார்த்து கொள்ளவும்.

## பாகுதி – 3 கொடுக்கல் வாங்கல்

**கேள்வி :** கொடுக்கல் வாங்கல் பற்றியும் இஸ்லாத்தில் சட்டங்கள் உள்ளதா?

**பதில் :** இஸ்லாத்தில் மனிதனுடைய அனைத்து செயல்களுக்கும், சட்டங்கள் உள்ளன. மார்க்கம் தடை செய்யப்பட்ட முறையில் ஒருவன் பொருள் சம்பாதித்து சாப்பிடுவதால் துஆக்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

**கேள்வி :** கொடுக்கல் வாங்கல் உடைய வகைகள் எத்தனை?

**பதில் :** பல வகைகள் உள்ளன. 1. விற்பது, வாங்குவது, 2. கடன் கொடுப்பது, 3. கூட்டு வியாபாரம், 4. அடகு வைப்பது, 5. அன்பளிப்பு, 6. வாடகைக்கு விடுவது, 7. சம்பளத்தில் வேலை பார்ப்பது.

**கேள்வி :** விற்பதில் வாங்குவதின் முறைகள் என்ன?

**பதில் :** பொருளுடைய விலையை பார்த்து அதை மனப்பூர்வமாக ஏற்று பொருளுடையவர்க்கு அதன் கிரையத்தை கொடுக்க வேண்டும். நமக்கு சொந்தமில்லாத பொருளை யாருக்கும் விற்பது கூடாது.

**கேள்வி :** வட்டி என்றால் என்ன?

**பதில் :** ஒரு பொருளுக்கு கடனாக பணத்தை கொடுத்து விட்டு திரும்ப வாங்கும் போது அதிகமாக வாங்குவது வட்டியாகும்.

**கேள்வி :** வட்டியின் வகைகள் எத்தனை?

**பதில்:** பல வகைகள் உள்ளன. அனைத்துமே பெரும் பாவமாகும். வட்டி வாங்குவதும் கூடாது. கொடுப்பதும் கூடாது.

**கேள்வி :** வட்டியின் அபாயம் என்ன?

**பதில் :** வட்டித் தொழில் செய்வதால் இவ்வுலகிலேயே நிறைய வேதனைகள் ஏற்படுகிறது கொடுத்து உதவக்கூடிய மனப்பான்மை இல்லாமல் ஆகிவிடும். இரக்க சிந்தனை இருப்பது இல்லை. பொருள் ஆசைஅதிக மாகிவிடுகிறது. வட்டித் தொழில் செய்பவர்களுக்கு மரியாதை கிடைப்பதில்லை. மறுமையில் நிறைய வேதனை உள்ளன.

**கேள்வி :** சம்பளத்தில் வேலை பார்ப்பதில் இஸ்லாம் கூறும் வழிமுறைகள் என்ன?

**பதில் :** நமக்கு ஒப்படைக்கப்பட்ட வேலையை நல்ல விதமாக செய்து முடிக்க வேண்டும் அந்த நேரத்தில் வேறு வேலைகள் செய்யக் கூடாது. முதலாளிக்கு சொந்தமான பொருட்களை நமது சொந்த தேவைக்காக உபயோகிப்பது கூடாது.

**கேள்வி :** முதலாளி எப்படி நடந்து கொள்ள வேண்டும்.

**பதில் :** சக்திக்கு மீறி யாரிடத்திலும் வேலை வாங்குவது கூடாது. வேலை முடிந்ததும் பேசப்பட்ட கூலியை உடனே கொடுத்து விட வேண்டும்.

## பகுதி – 4 இஸ்லாமிய பண்பாடுகள்

**கேள்வி :** இஸ்லாமிய பண்பாடுகள் என்றால் என்ன,

**பதில் :** ஒருவருக்கொருவர் எப்படி நடந்து கொள்ள வேண்டும். உண்ணுவது, உடை உடுத்துவது போன்ற பழக்க வழக்கங்கள் எப்படி

இருக்க வேண்டுமென்று அல்லாஹ்வும் ரஸூலும் கூறியுள்ளார்களோ அதற்கு இஸ்லாமிய பண்பாடு என்று சொல்லப்படும். இங்கு சில பண்பாடுகள் சொல்லப்படுகின்றன.

**கேள்வி :** ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்.

**பதில் :**

1. ஸலாம் கூற வேண்டும்.
2. ஸலாத்திற்கு பதில் மொழிய வேண்டும்.
3. பெரியவர்களுக்கு மரியாதையும், சிறியவர்களின் மீது அன்பும் காட்ட வேண்டும்.
4. சுக துக்கங்களில் கலந்து கொள்ள வேண்டும்.
5. உதவி ஒத்தாசை செய்ய வேண்டும்.
6. யாருக்கும் எந்தத் தொல்லையும் கொடுக்கக் கூடாது.
8. குறை சொல்லக் கூடாது.
9. குறை தெரிந்தால் அதை மறைக்க வேண்டும்.
10. அநியாயம் செய்யக் கூடாது.
11. நோய் விசாரிக்க வேண்டும்.
12. விருந்துக்கு அழைத்தால் ஏற்றுக் கொள்ள வேண்டும்.
13. வாக்குறுதியை நிறை வேற்ற வேண்டும்.
14. ஒற்றுமைக்கு ஒன்றுபட வேண்டும்.
15. மூன்று நாட்களுக்கு மேல் யாரிடமும் பேசாமல் இருக்கக் கூடாது.
16. தும்மும் போது ஒருவர் அல்ஹம்து லில்லாஹ் என்று சொன்னால் நாம் யர்ஹமுகல்லாஹ் என்று சொல்ல வேண்டும்.
17. நாம் யார் மனதையும் புண் படுத்த கூடாது.
18. அப்படி புண் படுத்தப்பட்டு இருந்தால் மன்னிப்பு கேட்க தயங்குவது கூடாது.
19. புறம் பேசுவது கூடாது.
20. தவறாக எண்ணக் கூடாது.
21. அவர் மரணித்து விட்டால் ஜனாஸாவில் கலந்து கொள்ள வேண்டும்.

**கேள்வி :** பிற சமயத்தவர்களிடத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

பதில் : 1. அநியாயமாக யாருடைய பொருளையும் அபகரிப்பது கூடாது.
2. கொலை செய்யக் கூடாது.
3. யார் மனதையும் புண் படுத்துவது கூடாது.
4. துன்ப படுபவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.
5. அவர்கள் நேர்வழி வருவதற்கு அல்லாஹ்விடம் துஆ செய்ய வேண்டும்.

**கேள்வி : பெற்றோர்களுக்கு செய்ய வேண்டிய கடமைகள் என்ன?**

பதில் : 1. அவர்கள் கட்டளைக்கு கட்டுப்பட வேண்டும். மார்க்கத்திற்கு புறம்பாக செய்யச் சொன்னால் அப்பொழுது கட்டுப்படக் கூடாது.
2. அவர்களுடைய மனதை புண்படுத்தாமல் நடந்து கொள்ள வேண்டும்.
3. அவர்களுக்கு மரியாதை செய்ய வேண்டும்.
4. அவர்களுக்கு பணி விடை செய்ய வேண்டும்.
5. அவர்கள் நம்மை விட்டும் சென்று விட்டால் அவர்களுக்காக நாம் நன்மையை அனுப்பிக் கொண்டே இருக்க வேண்டும். ஸதகா கொடுக்க வேண்டும். குர் ஆன் ஓத வேண்டும்.
6.வெள்ளிக்கிழமை தோறும் அவர்களுடைய கப்ருக்கு சென்று ஜியாரத் செய்ய வேண்டும்.

*குறிப்பு :* தாதா, தாதி, நானா, நானி, பெற்றோர்கள் போன்றவர்கள். காலா, மாமா தாயைப் போன்றவர்கள் சிச்சா, குப்பி தந்தையை போன்றவர்கள்.

**கேள்வி : ஆசிரியர்களுக்கு செய்ய வேண்டிய கடமைகள் என்ன?**

பதில்: 1. பணிவாக நடக்க வேண்டும். 2. அவர்கள் சொல்வதை கேட்க வேண்டும். 3. அவர்களுக்கு மரியாதை செய்ய வேண்டும். 4.அவர்களை உயர்வாக பேச வேண்டும். 5. குறை சொல்லக் கூடாது. 6. அவர்கள் திட்டினாலோ, அடித்தாலோ கோபிக்கக் கூடாது. 8. அவர்களுக்காக துஆ செய்ய வேண்டும். 9. அவர்கள் மரணத்திற்குப் பின்னால் அவர்களுடைய பாவ மன்னிப்பிற்காக, உயர்ந்த அந்தஸ்திற்காக அதிகமாக துஆ செய்ய வேண்டும்.

**கேள்வி : கணவருக்கு மனைவி செய்ய வேண்டிய கடமைகள் என்ன?**

பதில் : 1. கணவனுடைய கட்டளைக்கு கட்டுப்பட வேண்டும்.

2. கற்பை பாதுகாக்க வேண்டும். 3. அவருடைய அனுமதி இல்லாமல் அவருடைய எந்த பொருளையும் யாருக்கும் கொடுக்கக் கூடாது. 4. அவருடைய அனுமதி இல்லாமல் வெளியே போகக் கூடாது. 5. அவருடைய வருமானத்திற்கு மீறி எதையும் வாங்கித் தரும்படி கேட்கக் கூடாது. 6. அவருடைய மனதைப் புண் படுத்தக்கூடாது. 7. சுத்தமாக இருக்க வேண்டும்.

**கேள்வி : மனைவிக்கு கணவர் செய்ய வேண்டிய கடமைகள் என்ன?**

**பதில்** : 1. மார்க்க கல்வியைப் புகட்ட வேண்டும். 2. மார்க்கத்திற்குப் புறம்பாக நடக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். 3. தொழுக சொல்ல வேண்டும். 4. ரமலானில் நோன்பு வைக்கச் சொல்ல வேண்டும். 5. அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். 6. மனதை புண் படுத்தக் கூடாது. 7.அநீதி இழைக்கக் கூடாது. 8. அவர்களுடைய மனதை மகிழ்ச்சிப் படுத்த வேண்டும். 9. மனவருத்தம் ஏற்பட்டால் மூன்று நாட்களுக்கு மேல் பேசாமல் இருக்கக் கூடாது.. 10. அடிக்கக் கூடாது.

**கேள்வி : விருந்தினருக்கு செய்ய வேண்டிய கடமைகள் என்ன?**

**பதில்** : 1. மகிழ்ச்சியாக வரவேற்க வேண்டும். 2. அவர்கள் தங்குவதற்கு நல்ல ஏற்பாடு செய்ய வேண்டும். 3. முடிந்தளவு அவர் விரும்பும் உணவுகளைக் கொடுக்க வேண்டும். 4. அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தியாக்க வேண்டும். 5. பணி விடை செய்ய வேண்டும். 6. மூன்று நாள் வரை அவர்களுக்கு விருந்து உபகாரம் செய்ய வேண்டும். 7. அவர்களிடத்தில் தர்க்கம் செய்யக் கூடாது. 8. அவர்களுடைய மனதை புண் படுத்தக் கூடாது. 9. அவர்களை சந்தோஷப் படுத்த வேண்டும். 10. அவர்கள் திரும்பிச் செல்லும் போது வீட்டு வாசல் வரை உடன் சென்று வழியனுப்ப வேண்டும்.

**கேள்வி : உயிரினங்களுக்கு செய்ய வேண்டிய கடமைகள் என்ன?**

**பதில்** : 1. அவசியமில்லாத மிருகங்களை, பறவைகளை அடைத்துப் போடுவது கூடாது. 2. தொல்லை கொடுக்கக் கூடாது. 3. சித்திரவதை செய்யக் கூடாது. 4. அதற்கு உணவு, குடிப்பு நல்ல முறையில் ஏற்பாடு செய்ய வேண்டும். 5. அதன் சக்திக்கு மீறி எந்த வேலையும் வாங்கக் கூடாது. 6. எல்லை மீறி அடிக்கக் கூடாது. 7. அதை அறுக்கும் போது கூர்மையான கத்தியைக் கொண்டுதான் அறுக்க வேண்டும்.

**கேள்வி : பிறரை பார்க்கச் செல்வதின் ஒழுக்கங்கள் என்ன?**

பதில் : 1. ஸலாம் சொல்ல வேண்டும். 2. அனுமதி பெற்று உள்ளே செல்ல வேண்டும். 3. தூங்கும் நேரத்திலோ, ஓய்வு நேரத்திலோ , சாப்பாட்டு நேரத்திலோ செல்லக் கூடாது. குறிப்பாக இரவு நேரத்தில் செல்லக் கூடாது. 4. நம்மால் முடிந்த அளவு அன்பளிப்புகளை வாங்கிச் செல்ல வேண்டும். 5. திரும்பி வரும் போது அனுமதி பெற்று ஸலாம் சொல்லிவிட்டு வர வேண்டும்.

**கேள்வி : சபையில் அமர்வதின் ஒழுக்கம் என்ன?**

பதில் : 1. சுத்தமாகச் செல்ல வேண்டும். 2. வாயில் துர்வாடை வரக் கூடாது. 3. கிடைக்கும் இடத்தில் அமர்ந்து கொள்ள வேண்டும். 4. சபையில் நடந்த ரகசிய பேச்சுக்களை வெளியே சொல்லக் கூடாது. 5. சிரிக்க கூடாது, சைகை செய்வது, கனைப்பது, அவசியமில்லாமல் இருமுவது, கண் சிமிட்டுவது கூடாது, 6. பாதையில் அமரக்கூடாது. 7. பெரியவர்களுக்கு முன்னால் காலுக்கு மேல் காலைப் போட்டு அமரக்கூடாது. 8. மரியாதையாக அமர வேண்டும்.

**கேள்வி: பேசுவதினுடைய ஒழுக்கங்கள் யாவை?**

பதில் : 1.யாரிடத்தில் பேசினாலும் நளினமாகப் பேச வேண்டும். 2. தெளிவாகப் பேச வேண்டும். 3. கேட்கும் அளவு சப்தம் இருந்தால் போதும். 4. வேக வேகமாக பேசக் கூடாது. 5. பன்மையான வார்த்தைகளை உபயோகிக்க வேண்டும். 6. மனம் புண்படும்படி பேசக் கூடாது. 7. ஒருவர் பேசும் போது இடையில் குறுக்கிடக் கூடாது. 8. கொட்டாவி வரும் போதும், தும்மும் போதும் முகத்தை தாழ்த்திக் கொள்ள வேண்டும். 9. பிறர் பேசுவதை கவனமாகக்கேட்க வேண்டும். 10. ஏதேனும் கேட்டால் பதில் கூற வேண்டும். 11. ஆதாரம் இல்லாத விஷயங்களை வெளியிடக் கூடாது. 12. பெருமையாக பேசக் கூடாது.

**கேள்வி : சாப்பிடுவதின் ஒழுக்கம் என்ன?**

பதில் : 1. கைகளை கழுவ வேண்டும். 2. பிஸ்மில்லாஹ் சொல்ல வேண்டும். 3. வலது கையில் சாப்பிட வேண்டும். 4. அளவுக்கு அதிகமாக சூடாக இருக்கக் கூடாது. 5. சிறு சிறு கவளமாக எடுக்க வேண்டும். 6. பணிவாக அமர வேண்டும். 7. படுத்து, நின்று கொண்டு சாப்பிடுவது கூடாது. 8. சாப்பிட்டு முடிந்தவுடன் **அல்ஹம்து**

வில்லாஹில்லதீ அத்அமனீ, வசகானீ வஜஅலனீ மினல்முஸ்லிமீன் என்று துஆ செய்ய வேண்டும்.

**கேள்வி :** நீர் அருந்துவதின் ஒழுக்கம் என்றால் என்ன?

**பதில் :** 1. டம்ளரை வலது கையில் எடுக்க வேண்டும். 2. அதில் ஏதாவது தூசி இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். 3. பிஸ்மில்லாஹ் சொல்ல வேண்டும். 4. மூன்று மூச்சில் குடிக்க வேண்டும். 5. குடித்த பிறகு அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்ல வேண்டும்.

## பகுதி – 5

## இஸ்லாமிய குண ஒழுக்கங்கள்

**கேள்வி :** இஸ்லாத்தில் குண ஒழுக்கங்கள் பற்றியும் கூறப்படுகிறதா?

**பதில் :** ஆம். இஸ்லாமிய போதனை ஐந்து விதமாக பிரிக்கப்பட்டுள்ளது: 1. குண ஒழுக்கங்கள். 2. கொள்கைகள் 3. வணக்கங்கள். 4. கொடுக்கல் வாங்கல் 5. பண்பாடுகள்.

**கேள்வி :** குணங்கள் எத்தனை வகை?

**பதில் :** குணங்கள் இருவகை 1. நற்குணங்கள் 2. துர்குணங்கள்.

**கேள்வி :** நற்குணங்கள் யாவை?

**பதில் :** பல இருக்கின்றன.

1. மனத்தூய்மை அல்லாஹ்வுக்காக எதையும் செய்வது 2. தவ்பா – பாவ மன்னிப்பு தேடுதல் 3. பொறுமை 4. நன்றி 5. சகிப்புத் தன்மை 6. உள்ளதைக் கொண்டு போதுமாக்கிக் கொள்வது. 7. பேணுதல் 8. உலகப் பற்று இல்லாமை 9. இறைவனை நேசிப்பது. 10. இறைவனுக்கு பயப்படுவது. 11. இறைவனின் மீது முழு நம்பிக்கை வைப்பது. 12. இறைவனிடம் சரணாகதியடைதல். 13. இறைவனின் விதியை பொருந்திக் கொள்வது. 14. பணிவாக இருப்பது. 15. இறைவனின் அடிமை என்ற உணர்வில் இருப்பது. 16. இறைவனுக்காக தன்னை அர்ப்பணிப்பது, 17. தன்னை அல்லாஹ்விடம் ஒப்படைப்பது. 18. உண்மை பேசுவது. 19. பிறர் நலம் பேணுவது. 20. ஒற்றுமையாக இருப்பது.

கேள்வி: துற்குணங்கள் யாவை?

பதில் : துற்குணங்கள் பல உள்ளன. 1. பேராசை 2. நிறைய திட்டம் தீட்டுவது 3. முகஸ்துதி பிறர் புகழ்வதற்காக செயல்படுவது 4. பதவி ஆசை 5. பொருளாசை 6.கஞ்சத்தனம் 7. உலக ஆசை 8. பெருமையடிப்பது 9. தற்பெருமை 10.கோபப்படுவது 11. புறம்பேசுவது - பிறர் குறைகளை பேசுவது 12. பொறாமைப்படுவது 13. குரோதம் கொள்வது 14.அதிகம் சாப்பிடவேண்டும் என்று ஆசைப்படுவது 15. அதிகம் பேச ஆசைப் படுவது. 16. பொய் சொல்லுவது. 17. திட்டுவது. 18. கேலி செய்வது.19. பிரிவினை உருவாக்குவது. 20. கோள் சொல்வது.

# நம் நபியின் வாழ்க்கை

## பாடம் - 1

## நபிகளாரின் உடல் அமைப்பு

கேள்வி : நபிகளாரின் உடல் அமைப்பு பற்றி கூறு?

பதில் : கூறுகிறேனே! நெட்டையும் அல்ல, குட்டையும் அல்ல. நடுத்தர உயரமானவர்கள். கோதுமை நிறம், சதைப்பிடிப்புள்ளவர்கள், மென்மையான தோல், தலை நடுத்தரமான பெரியது. பெரிய கண்கள், கருப்பு புருவங்கள், கருத்த தலை முடி, விரிந்த வாய், மெல்லிய பிரகாசிக்கும் பற்கள், சிவந்த கண்கள், அடர்ந்த தாடி, அழகிய மூக்கு, ஒளிவீசும் முகம், அகன்ற நெற்றி, அழகிய பிடரி, விரிந்த நெஞ்சு, தொந்தி இல்லாத வயிறு, உறுதிமிக்க கைகள், சதைப் பிடிப்பான குதிங்கால், நறுமணமான வியர்வை மற்றும் உமிழ்நீர். மேலும் விரைந்து நடப்பார்கள்.

## பாடம் -2

## நபிகளாரின் பரிசுத்தமான பழக்க வழக்கங்கள்

கேள்வி : பெருமானாரின் பழக்க வழக்கங்கள் எப்படி இருந்தது?

பதில் : அவர்களின் பழக்கவழக்கங்கள் - குணங்களில் சில

1. வீரமாக இருப்பார்கள்.

2. ஈகை குணம் படைத்தவர்கள்.

3. கேட்பவர்களுக்கு இல்லை என்று சொல்லுவதில்லை.

4. பொறுமையும் சகிப்புத் தன்மையும் நிறைந்தவர்கள்.

5. விரோதிகளுக்குக்கூட தீய பிரார்த்தனை செய்யாத மாமனிதர்.

6. மிக மிக வெட்கமான சுபாவம் உள்ளவர்கள்.

7. பழி வாங்கும் குணம் இல்லாதவர்கள்.

8. கோபப்பட மாட்டார்கள்.

9. மார்க்கத்திற்குப் புறம்பாகச் செய்தால் கோபப்படுவார்கள்.

10. உணவைக் குறை சொல்ல மாட்டார்கள்.

11. வெள்ளரி, தர்பூசணி, பேரீத்தம் பழம் , தேன் போன்றவைகள் பெருமானாருக்கு மிகவும் பிடிக்கும்.

13. சுய வேலைகளை தானே செய்வார்கள். கிழிந்த ஆடைகளை தைப்பார்கள். வீட்டு வேலைகளில் உதவியாக இருப்பார்கள்.

14. நோயாளியிடம் சென்று விசாரிப்பார்கள்.

15. ஏழை விருந்துக்கு அழைத்தாலும் மறுக்க மாட்டார்கள்.

16. எளிமையாக இருப்பார்கள்.

17. வெண்ணிற ஜிப்பா மிக பிடிக்கும்.

18. அல்லாஹ்வை அதிகம் திக்ரு செய்வார்கள்.

19. வீண் பேச்சு பேச மாட்டார்கள்.

20. மகிழ்ச்சியூட்டும் படி நகைச்சுவையும் பேசுவார்கள்.

21. முக மலர்ச்சியுடன் இருப்பார்கள்.

22. யார் மனதையும் புண் படுத்தியதில்லை.

23. அல்லாஹ்வைத் தவிர யாருக்கும் பயப்பட மாட்டார்கள்.

## பாடம் - 3

## பெருமானாரின் மக்கா வாழ்க்கை

**கேள்வி :** பெருமானாரின் மக்கா வாழ்வு பற்றி தெரிந்ததைக் கூறு?

**பதில்** : கூறுகிறேன். கேளுங்கள். ரபீஉல் அவ்வல் மாதம் பிறை 9 அல்லது 12 திங்கள் அதிகாலை சூரிய உதயத்திற்கு முன் ( ஏப்ரல் மாதம் 20 தேதி கி.பி. 571 - ல்) மக்கா நகரில் பிறந்தார்கள்.

தந்தையின் பெயர் : அப்துல்லாஹ் அவர்கள்.

தாதா பெயர் : அப்துல் முத்தலிப்பு அவர்கள்.

முப்பாட்டனார் : ஹா ஷிம் அவர்கள்.

தாய் பெயர் : ஆமினா அம்மாள்

நானி பெயர் : பர்ரா அம்மாள்

பெருமானர் அவர்கள் தாய் வயிற்றில் இருக்கும் போதே அவரது தந்தை மரணமாகி விட்டார்கள். ஆறு வயதின் போது தாயும் மரணமானார்கள். தாதா தான் வளர்த்தார்கள். 9 வயதாகும் போது தாதாவும் காலமாகி விட்டார். பிறகு பெரிய தந்தை அபூதாலிப் அவர்கள் வளர்த்தார்கள். 25 வயதானதும் ஹஜ்ரத் ஹதீஜா அம்மையாரை திருமணம் செய்தார்கள். 40 வயதானதும் நபி பட்டம் கிடைத்தது. 13 வருடம் மக்காவில் இருந்து இஸ்லாமிய அழைப்புப் பணி செய்தார்கள். 53 வது வயதில் மக்காவை விட்டு மதினா நகருக்கு குடி பெயர்ந்தார்கள்.

## பாடம் - 4 மதீனா வாழ்வு

**கேள்வி :** மதீனாவில் எவ்வளவு காலம் தங்கி இருந்தார்கள்?

பதில் மதீனாவில் பத்து ஆண்டுகள் வாழ்ந்தார்கள்.

**கேள்வி :** பெருமானாரின் 10 ஆண்டு கால வாழ்வு பற்றி சுருக்கமாக கூறுங்கள்?

பதில் : கூறுகிறேன் கேளுங்கள். மதீனா வந்ததும் பள்ளிவாசல் ஒன்றை உருவாக்கினார்கள். பலரும் முஸ்லிம்கள் ஆனார்கள் . நோன்பு கடமையானது. பெருநாள் தொழுகை கடமையானது. பத்ரு, உஹத்போன்ற தற்காப்பு போர்கள் நடந்தது. ஹிஜ்ரி 10 ல் நபியவர்கள் சஹாபாக்களுடன் ஹஜ்ஜுக்குச் சென்று வந்தார்கள். ஹிஜ்ரி 11 ஸஃபர் பிறை 28 ல் நோய் வாய்ப்பட்டார்கள். 12 நாட்கள் வரை நோயாளியாக இருந்தார்கள். ரபீஉல் அவ்வல் பிறை 12 ம் நாள் திங்கள் பகலில் இறைவனடி சேர்ந்தார்கள். மதீனாவில் அவர்கள் இல்லத்திலேயே அடக்கப்பட்டார்கள்.

ஸல்லல்லாஹு அலா முஹம்மதின் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

# பாடம் - 5. பரிசுத்த மனைவியர்கள்

**கேள்வி :** நபிகளாருக்கு எத்தனை மனைவியர்கள்?

**பதில் :** நபியவர்கள் 11 நிக்காஹ் செய்தார்கள் . நபியவர்கள் மரணிக்கும் போது 9 மனைவியர்கள் இருந்தார்கள்.

1. ஹஜ்ரத் ஹதீஜா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
2. ஹஜ்ரத் சவ்தா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
3. ஹஜ்ரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
4. ஹஜ்ரத் ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
5. ஹஜ்ரத் ஜைய்னப் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
6. ஹஜ்ரத் உம்முஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
7. ஹஜ்ரத் ஜுவைரிய்யா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
8. ஹஜ்ரத் உம்முஹபீபா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
9. ஹஜ்ரத் மைமூனா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
10. ஹஜ்ரத் ஸஃபிய்யா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
11. ஹஜ்ரத் ஜைய்னப் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்

குறிப்பு: ஹஜ்ரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை தவிர மற்ற எல்லா மனைவியர்களும் விதவைகளாகும்.

**கேள்வி :** பெருமானாருக்கு எத்தனை குழந்தைகள்?

**பதில் :** மூன்று ஆண் பிள்ளைகள், நான்கு பெண் குழந்தைகள்.

1. ஹஜ்ரத் காசீம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்
2. ஹஜ்ரத் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்
3. ஹஜ்ரத் இப்ராஹீம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்

இம்மூவரும் சிறு பிராயத்திலேயே இறந்து விட்டார்கள்.

1. ஹஜ்ரத் ஜைனப் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
2. ஹஜ்ரத் ருகைய்யா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
3. ஹஜ்ரத் உம்முகுல்சூம் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்
4. ஹஜ்ரத் பாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்

<u>குறிப்பு :</u> ஹஜ்ரத் இப்ராஹீமை ( ரலி) தவிர மற்ற எல்லோரும் ஹஜ்ரத் ஹதீஜா ( ரலியல்லாஹு அன்ஹா) அவர்களுக்கு பிறந்தவர்களாகும். ஹஜ்ரத் பாத்திமா நாயகியின் மூலம் தான் நபிகளாரின் வம்சம் வளர்ந்தது.

## பாடம் - 6 சில பயனுள்ள துஆக்கள்

தினந்தோறும் தேவைப்படும் சில துஆக்களை கூறு?

பதில் : சில துஆக்கள் வருமாறு

1. பள்ளி வாசலில் நுழையும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ افْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ

2. பள்ளிவாசலை விட்டு வெளியே வரும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ مِنْ فَضْلِكَ

3. வீட்டில் நுழையும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ خَيْرَ الْمَوْلَجِ وَخَيْرَ
الْمَخْرَجِ بِسْمِ اللّٰهِ وَلَجْنَا وَعَلَى اللّٰهِ رَبِّنَا تَوَكَّلْنَا

4. வீட்டில் இருந்து வெளியேறும் போது ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ لَاحَوْلَ وَلَاقُوَّةَ اِلَّا بِاللّٰهِ

5. சாப்பிடும்முன் ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ وَعَلٰى بَرَكَةِ اللّٰهِ

6. சாப்பிட்டு முடிந்தும் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَطْعَمَنَا وَسَقَانَا
وَجَعَلَنَا مِنَ الْمُسْلِمِيْنَ

7. தூங்கும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِاسْمِكَ اَمُوْتُ وَاَحْيٰى

8. தூங்கி எழுந்த பின் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَحْيَانَا بَعْدَ مَا
اَمَاتَنَا وَاِلَيْهِ النُّشُوْرُ

9. கழிப்பறையில் நுழையும் முன் ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ
اَللّٰهُمَّ اِنِّىْ اَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ

10. கழிப்பறையில் இருந்து வெளியே வரும் போது ஓதும் துஆ

غُفْرَانَكَ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَذْهَبَ عَنِّى
الْاَذٰى وَعَافَانِىْ

# பிள்ளைகளுக்கு பெரியார்கள் கூறும் அருமையான அறிவுரைகள்.

## 1. சுத்தம்

அருமை பிள்ளைகளே! சுத்தமாக இருப்பது மிக நல்ல பழக்கமாகும். சுத்தமில்லாத பிள்ளைகளை யாரும் பிரியப்பட மாட்டார்கள். சுத்தமான பிள்ளைகளை அனைவரும் விரும்புவார்கள். சுத்தமாக இருப்பவர்களை அல்லாஹ் விரும்புகின்றான்.

சுத்தமாக இருப்பது ஈமானில் பாதி என்று நம் நபிகளார் அருளினார்கள். எனவேதான் தொழுவதற்கு முன் அவசியம் உளுச் செய்ய வேண்டும் என்று கட்டளை இருக்கிறது. உளு செய்வதால் உடல் சுத்தமாவதுடன் உள்ளமும் சுத்தமாகிறது. ஆடை , இருப்பிடம், சுற்றுப்புறம், எல்லாம் சுத்தமாக இருக்க வேண்டும். சுத்தம் சுகம் தரும். சுத்தம் இரு வகைப்படும். 1. உடல் சுத்தம். 2. உள்ளம் சுத்தம். உள்ளம் சுத்தம் என்றால் உள்ளத்தில் பொறாமை, கர்வம், பேராசை போன்ற துற்குணங்கள் இருக்கக் கூடாது. நல்லவர்களும், அறிவுள்ளவர்களும் உடலையும், உள்ளத்தையும் பரிசுத்தமாக வைத்திருப்பார்கள். அருமையான பிள்ளைகளே நீங்களும் நல்லவர்கள் , அறிவுள்ளவர்கள். எனவே எப்பொழுதும் சுத்தமாக இருங்கள்.

தினந்தோறும் காலையில் பல் துலக்கி, கை, முகம், கழுவி உளு செய்து கொள்ளுங்கள். முடிந்தால் தினந்தோறும் குளித்துக் கொள்ளுங்கள். முடியாவிட்டால் வெள்ளிக் கிழமை அவசியம் குளித்து விட்டு தொழுவதற்கு செல்லுங்கள். ஆடைகளை சுத்தமாக வைத்திருங்கள். நறுமணம், அத்தர் பூசுங்கள். இருக்குமிடம் சுற்றுப்புறம் அனைத்தையும் சுத்தமாக இருக்க கண்காணித்துக் கொள்ளுங்கள். எப்பொழுதும் உங்கள் உள்ளங்களை தீய எண்ணங்கள், துற்குணங்களை விட்டும் சுத்தமாக வைத்திருங்கள். அல்லாஹ் உங்களை உயர்ந்தவனாக ஆக்குவானாக. ஆமீன்.

## 2. உண்மை

பிரியத்திற்குரிய பிள்ளைகளே. உண்மை சொல்லுவது நல்ல பழக்கம் என்பதை நீங்கள் அறிவீர்கள். இப்பொழுது உங்களுக்கு அது சம்பந்தமாக சில விஷயங்கள் கூறுகிறோம். அல்லாஹுத ஆலா பரிசுத்த திரு குர் ஆனில் "ஈமான் கொண்ட விசுவாசிகளே அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள். இன்னும் உண்மையைச் சொல்லுங்கள்"

என்றும் இன்னொரு இடத்தில் "பொய் சொல்லாதீர்கள் " என்றும் கூறுகிறான். நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அருளினார்கள்: முஸ்லிம்களே உண்மையைப் பற்றி பிடித்து கொள்ளுங்கள். உண்மை பேசுவது நல்ல செயல்களின் பக்கம் சேர்த்து வைக்கிறது. நற்செயல்கள் சொர்க்கத்தின் வழியை காட்டுகிறது. உண்மை பேசுபவர்களை அல்லாஹ் உண்மையாளர்கள் என்று எழுதுகிறான். பொய் சொல்லாதீர்கள். பொய் சொல்வது தீய செயல்களின் பக்கம் சேர்த்து வைக்கிறது. பொய் பேசினால் அல்லாஹ் பொய்யாளர்களின் பட்டியலில் எழுதுகிறான்.

நீங்களே பார்த்திருப்பீர்கள்! பொய் சொல்பவர்களை மக்கள் கண்ணியமான முறையில் பார்ப்பதில்லை. ஹள்ரத் சைய்யிதுனா அப்துல் காதிர் ஜீலானி ( ரஹ் ) அவர்கள் ஓர் பெரும் இறை நேசர். இவர்களை மக்கள் முஹய்யித்தீன் ஆண்டகை என்று குறிப்பிடுகிறார்கள. தாங்கள் சின்ன பிள்ளைகளாக இருக்கும் பொழுதே இவர்களுடைய தந்தை மரணமாகிவிட்டார்கள். இவர்களுடைய தாய் தான் இவர்களை பராமரித்து வந்தார்கள். தாங்கள் ஆரம்ப கல்வி கற்ற பிறகு தாயிடம் கூறினார்கள. பக்தாத் நகரிலேயே கல்வி கூடங்கள் நல்ல விதமாக செயல்படுகின்றன. இங்கு பெரும், பெரும் பெரியார்களும் நல்ல ஆசிரியர்களும் இருக்கிறார்கள் என்று நான் கேள்விப்பட்டேன்.

தாங்கள் அனுமதித்தால் அங்கு சென்று பெரியோர்களின் சகவாசத்தில் இருந்து கல்வியும் நல்லொழுக்கமும் கற்று வருவேன் என்றார். தாய் அனுமதி அளித்து வழியனுப்ப முன் வந்தார்கள். அப்பொழுது நாற்பது தங்கக்காசுகளை ஆடையினுடைய ஒரு ஓரத்தில் வைத்து அபாயங்கள் வந்த பொழுதிலும் உண்மையே பேச வேண்டும். பொய் சொல்லக் கூடாது என்றார்கள. பிறகு பக்தாதுக்குச் செல்லக்கூடிய வியாபாரக் குழுவினரிடம் ஒப்படைத்தார்கள். அந்த வியாபாரக் குழு போய்க் கொண்டிருக்கும் பொழுது ஒரு கொள்ளைக் கூட்டம் வியாபாரிகள் கொண்டு சென்ற பொருள்களையெல்லாம் கொள்ளையடித்தார்கள். அப்பொழுது ஒரு கொள்ளைக்காரன் இவர்களிடம் உன்னிடத்திலே என்ன இருக்கிறது என்று கேட்டான். அப்பொழுது அவர்கள் நாற்பது தங்கக் காசுகள் இருக்கிறது என்று சொன்னார்கள். கொள்ளைக்காரன்

கேலியாக நினைத்துக் கொண்டான். பிறகு ஒரு கொள்ளைக்காரன் வந்து கேட்டான். அப்பொழுதும் அதே பதிலைச் சொன்னார்கள்.

இந்த பையன் வேடிக்கையாகக் கூறுகிறான் என்று அவனும் நினைத்துக் கொண்டான். பிறகு கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் இவர்களிடம் என்ன இருக்கிறது என்று கேட்டான். அதே பதிலை கூறினார்கள். எங்கே இருக்கிறது என்று கேட்டான். இதோ இங்கே இருக்கிறது என்று இருந்த இடத்தைக் காட்டினார்கள். அவன் ஆச்சரியப்பட்டு நாங்களெல்லாம் திருடர்கள் என்று தெரிந்தும் நீ ஏன் உண்மையை சொன்னாய் என்று கேட்டான்.

அதற்கு இவர்கள் எனது தாய் எப்பொழுதும் உண்மையே பேச வேண்டும். என்று உபதேசம் செய்து வழியனுப்பி வைத்தார்கள் என்று கூறினார்கள் . இந்த பதிலைக் கேட்டதும் அவனுடைய உள்ளத்தில் மாற்றம் ஏற்பட்டது. அழ ஆரம்பித்தான். தம்பி! நீ உன்னுடைய தாயின் கட்டளைக்கு இவ்வளவு மரியாதை செய்கிறாய். நானோ என்னைப் படைத்த அல்லாஹு தஆலாவுக்கு பல வருடங்களாக மாறு செய்து கொண்டு இருக்கிறேன் என்று கூறினான். இவர்களின் கையை பிடித்துக் கொண்டு "இனிமேல் நான் இப்படியெல்லாம் பாவம் செய்ய மாட்டேன்" என்று உறுதி மொழி எடுத்துக் கொண்டான்.

இதைப் பார்த்த மற்ற திருடர்களும் மனம் திருந்தி இனி மேல் இப்படி செய்ய மாட்டோம் என்று வாக்குறுதி கொடுத்தார்கள். கொள்ளையடித்த பொருட்களையெல்லாம் திருப்பிக் கொடுத்து விட்டார்கள். அன்புள்ள பிள்ளைகளே ! பார்த்தீர்களா உண்மையினுடைய சக்தியை. நீங்களும் முஹ்யித்தீன் ஆண்டகை அவர்களைப் போல் எப்பொழுதும் உண்மையே சொல்லுங்கள். மனதில் உள்ளதை சரியாகச் சொல்லுங்கள். பொய் சொல்ல வேண்டாம். அல்லாஹ் நம் அனைவரையும் உண்மையாளர்களாக ஆக்கி அருள் வானாக. ஆமீன்.

## 3. சொந்தக்காரர்கள்

பிள்ளைகளே ! திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான். முஸ்லிம்களே அல்லாஹ்வுக்கு அடி பணிந்து நடங்கள். அவனுக்கு யாரையும் இணை வைக்காதீர்கள். தன்னுடைய தாய், தந்தை இன்னும் சொந்தக்காரர்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வுடைய இந்தக் கட்டளையில் எல்லோருக்கும் முதலில் அல்லாஹ்வுக்கு உரிய கடமையும் அடுத்து

பெற்றோர்களுக்கு உரிய கடமையும், அடுத்து சொந்தக்காரர்களுக்கு உரிய கடமையும் உள்ளது என்று புரிய முடிகிறது. நபி பெருமானார் (ஸல்) அவர்களும் சொந்தக்காரர்களைப் பற்றி அதிகமாக கூறியுள்ளார்கள்.

ஒரு முறை ஒரு மனிதர் பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்து எல்லாவற்றையும் விட முதலில் நல்ல விதமாக யாரிடத்தில் நடக்க வேண்டும் என்று கேட்டார். அவர்கள் தாயிடத்தில் என்றார்கள். பிறகு யாரிடத்தில் என்று அவர் கேட்டார். அதற்கு நபியவர்கள் தாயிடத்தில் என்றார்கள். பிறகு யாரிடத்தில் என்று கேட்டார். அதற்கும் நபியவர்கள் தாயிடத்தில் என்றார்கள். நான்காவது முறை சொன்னார்கள் தந்தையிடத்தில்,சகோதரர்களிடத்தில்,நெருங்கிய சொந்தக் காரர்களிடத்தில் என்றார்கள்.ஒரு தடவை ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூரரே! நான் ஒரு பெரும் பாவம் செய்து விட்டேன்.

என்னுடைய தவ்பா எப்படி ஏற்றுக் கொள்ளப்படும் என்றார். உடனே நபியவர்கள் உன்னுடைய தாய் உயிருடன் உள்ளார்களா என்று கேட்டார். இல்லையென்று அவர் கூறினார். சின்னம்மா உயிருடன் இருக்கிறார்களா என்று கேட்டார்கள். ஆம் என்றார் அவர். அவரிடம் நல்ல விதமாக நடந்து கொள்ளுங்கள் என்று நபியவர்கள் கூறினார்கள். சொந்தக்காரர்களிடம் நல்ல விதமாக நடந்து கொண்டால் நிறைய பிரயோஜனங்கள் இருக்கின்றன. நபிகளார் அருளினார்கள். சொந்தக்காரர்களிடத்தில் நல்ல விதமாக நடப்பதால் அன்பு வளர்கிறது, பொருள் பெருகுகிறது, வயதில் பரக்கத் ஏற்படுகிறது. உணவில் விஸ்தீரணம் எற்படுகிறது. துன்பங்கள் நீங்குகின்றன. பாவங்கள் மன்னிக்கப்படுகிறன. சொர்க்கத்தில் நுழையும் தகுதி ஏற்படுகிறது.

பிரியமான பிள்ளைகளே! உறவினர்களிடம் நன் முறையில் நடந்து கொள்ளுவதால் அல்லாஹ் இன்னும் அவனுடைய ரசூலுடைய திருப் பொருத்தம் கிடைப்பதுடன் உலக ரீதியான பயன்களும் இருக்கின்றன. எனவே அவர்களிடத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைகளை தெரிந்து கொள்ளுங்கள், செயல்படுங்கள்.

**அவர்களிடத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைகள்,**

1. அன்பாக, பாசமாக பழக வேண்டும்.
2. அவர்களுடைய சுக, துக்கங்களில் கலந்து கொள்ள வேண்டும்.
3. அவர்களுக்கு உதவியாக இருக்க வேண்டும்.

4. கடன் கேட்டால் கொடுக்க வேண்டும்.

5. அவர்களுக்கு செய்த உபகாரங்களை சொல்லிக் காட்டக் கூடாது.

6. அவர்கள் ஏழையாக இருந்தால் நம்மால் முடிந்த பொருளுதவி, பண உதவி செய்ய வேண்டும்.

7. பெரியவர்களிடம் மரியாதையாக நடந்து கொள்ள வேண்டும்.

8. அவர்களுடைய உயர்வு, தாழ்வை நம்முடைய உயர்வு, தாழ்வாக கருத வேண்டும்.

## பெற்றோர்களிடம் நடந்து கொள்ள வேண்டிய முறைகள்.

1. எப்பொழுதும் பெற்றோர்களுடன் நல்ல விதமாக நடந்து கொள்ளுதல்.

2. அவர்களிடம் மரியாதையாக பேச வேண்டும்.

3. அவர்களிடத்தில் வரும் போது பார்வை தாழ்த்திக் கொள்ள வேண்டும்.

4. அவர்களுடைய சொற்படி நடக்க வேண்டும்.

5. அவர்களுக்கு பணிவிடை செய்வதை தன்னுடைய கடமையாக கருத வேண்டும்.

6. அவர்களுக்கு அதிகமாக துஆ செய்ய வேண்டும்.

7. அவர்களிடத்தில் கடுமையாக நடந்து கொள்ளக்கூடாது.

8. அவர்களுடைய மனம் புண் படும் படி எதையும் செய்யவோ, பேசவோ கூடாது.

9. அவர்களுக்கு அன்பளிப்புகளை வழங்கிக் கொண்டு இருக்க வேண்டும்.

## 4.பக்கத்து வீட்டினர்கள்

பிள்ளைகளே! நபி பெருமானார் (ஸல்) அருளினார்கள். அண்டையிலிருப்பவர்களுக்கு மதிப்பு கொடுங்கள். அவர்களுக்கு துன்பம் கொடுக்காதீர்கள். நற்குணத்துடன் நடந்து கொள்ளுங்கள். அண்டையில் இருப்பவர்கள் மூன்று வகைப்படுவர். 1. சொந்தக்காரர்களான முஸ்லிம்கள், 2. சொந்தமில்லாத முஸ்லிம்கள். 3. முஸ்லிம் அல்லாதவர்கள்,

நம் நபியவர்களும் நம் முன்னோர்களும் இம்மூன்று வகையான அண்டை வீட்டாரிடத்திலும் நல்ல விதமாக நடந்து இருக்கிறார்கள். ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு அமர் என்ற ஸஹாபி ஒரு நாள் ஒரு ஆட்டை அறுத்தார்கள். அண்டை வீட்டிலிருந்த யூதர்

ஒருவருக்கு கறியை கொடுத்தனுப்பினார்கள்.

பிரியமான பிள்ளைகளே! நீங்களும் அண்டை வீட்டினருடன் நன்றாக நடந்து கொள்ளுங்கள். அவர்களிடத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைகளாவது.

1. மரியாதை செய்யுங்கள்.
2. துன்பம் கொடுக்காதீர்கள்
3. உதவி செய்யுங்கள்.
4. கடன் கேட்டால் கொடுங்கள்.
5. நோயாளியாக ஆகி விட்டால் சென்று விசாரியுங்கள்.
6. அவர்களுடைய வீட்டில் மகிழ்ச்சியான சம்பவம் நடந்தால் வாழ்த்துக் கூறுங்கள்.
7. அவர்களுடைய வீட்டில் கவலையான நிகழ்ச்சிகள் ஏற்பட்டால் கவலையில் பங்கு கொள்ளுங்கள்.
8. அவர்களுக்கு அன்பளிப்பு கொடுங்கள்.
9. அவர்கள் பற்றிய குறைகளை வெளியிடாதீர்கள்.
10. மரணம் சம்பவித்தால் அடக்கத்தில் கலந்து கொள்ளுங்கள்.

## 5. சிக்கனம்.

பிள்ளைகளே! மனிதர்களுக்கு உணவு, உடை, இருப்பிடம், அவசியமாகும். பணமின்றி இதைப்பெற முடியாது. எனவே தான் அனைவரும் உழைத்து சம்பாதிக்கிறார்கள். சம்பாதிக்கும் பணத்தை முறையுடன் செலவு செய்ய வேண்டும். நடு நிலையுடன் செலவு செய்ய வேண்டும் என்று அல்லாஹ் குர் ஆனில் கூறுகிறான். அவசிய அள்வை விட அதிகமாக செலவழிப்பது வீண் விரையமாகும். அவசியத்தை விட குறைவாக செலவழிப்பது கஞ்சத்தனமாகும். அவசிய அளவு செலவழிப்பது சிக்கனமாகும். வீண்விரையம் செய்வபர்கள் ஷைத்தானின் சகோதரர்கள் என்று குர்ஆன் கூறுகிறது. வீண் விரையம் செய்பவர்களை மக்களும் விரும்புவதில்லை. வீண் விரையம் செய்வதால்தான் இன்று முஸ்லிம்கள் பொருளாதார பின்னடைவில் இருக்கிறார்கள். சில பேருக்கு அல்லாஹுதஆலா செல்வத்தை நிறைய கொடுத்திருக்கிறான். அவர்கள் கஞ்சத்தனம் செய்கிறார்கள். கஞ்சத்தனம் செய்வது பெரும் பாவம் ஆகும்.

நரகத்திற்கு செல்ல வேண்டியது ஏற்படும். நபி பெருமானார் (ஸல்) அருளினார்கள். “ ஈகையுள்ளவன் அல்லாஹ்விற்கும் நெருக்கமானவன், மனிதரிடத்திலும் நெருக்கமானவன். நரகை விட்டும்

தூரமானவன், கஞ்சன் அல்லாஹ்விடமிருந்தும், சுவனத்திலிருந்தும் தூரமானவன். நரகத்திற்கு நெருக்கமானவன்" பிரியமான பிள்ளைகளே! கஞ்சத்தனம் செய்யாதீர்கள். கஞ்சனை யாரும் மதிப்பதில்லை. கஞ்சன் மன நிம்மதியுடன் இருக்க மாட்டான். பொருள் திருடு போய் விடுமோ, அழிந்து விடுமோ என்ற அச்சத்திலேயே இருப்பான். சிக்கனமாக வாழ பழகிக்கொள்ளுங்கள். உள்ளதை வைத்து போதுமாக்கிக் கொள்ளுகள். கடன் வாங்காதீர்கள். அதில் தான் கண்ணியம் இருக்கிறது.

## 6. வாக்குறுதியை நிறைவேற்றுங்கள்

பிள்ளைகளே! வாக்குறுதி கொடுத்தால் நிறைவேற்றுங்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். வாக்குறுதியை நிறைவேற்றாதவன் உண்மையான முஸ்லிம் இல்லை என்று நமது நபியவர்கள் அருளினார்கள். வாக்குறுதியை நிறைவேற்றுவதால் அல்லாஹ் பிரியப்படுகிறான்.

ஒரு தடவை ஒரு மனிதர் நம் நபியிடம் இந்த இடத்திலேயே இருங்கள். நான் வந்து விடுகிறேன் என்று சொல்லிவிட்டுச் சென்றார். பெருமானார் ( ஸல்) அவர்கள் மூன்று நாள் வரை அந்த இடத்திலேயே இருந்தார்கள். அதற்கு பிறகு அந்த மனிதர் வந்து மறந்து விட்டேன் என்று மன்னிப்புக் கேட்டார். பிள்ளைகளே வாக்குறுதியை நிறைவேற்றுபவர்களை மக்கள் மதிப்பார்கள். வாக்குறுதிக்கு மாறு செய்பவர்களை மக்கள் மதிப்பதில்லை. எனவே நீங்கள் வாக்குறுதி கொடுத்தால் அதை கண்டிப்பாக நிறைவேற்றுங்கள்.

## 7. நம்பிக்கை துரோகம்

நம்மை நம்பியவர்களுக்கு துரோகம் செய்யக் கூடாது. நம்மிடத்தில் ஏதாவது பொருளை யாரும் ஒப்படைத்தால் அதை கேட்கும் போது திருப்பித்தர வேண்டும். யாருக்கும் எந்த மோசமும் செய்யக் கூடாது. துரோகம் செய்யக் கூடாது. நமது முன்னோர்கள் எல்லாம் மிக நம்பிக்கைக்கு உரியவர்களாக இருந்துள்ளார்கள்.

ஹழ்ரத் இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) என்ற பெரியார் தனது ஆட்சியை எல்லாம் விட்டு விட்டு ஹலாலான முறையில் சம்பாதிப்பதற்காக ஒரு தோட்டத்தில் கண் காணிப்பாளராக

10 ரூபாய் சம்பளத்திற்கு சேர்ந்தார்கள். ஒரு நாள் தோட்டத்திற்கு உரிமையாளர் வந்து இனிமையான மாதுளம் பழம் பறித்து வா என்றார்கள். பறித்து வந்து கொடுத்தார்கள். ஆனால் அது புளித்தது. திரும்ப இனிப்பான மாதுளை பறித்து வா என்று எஜமானர் கூறினார். அதுவும் புளித்தது. மூன்றாவது முறையும் பறித்து வர சொன்னார். அதுவும் புளித்தது. எஜமானர் கோபப்பட்டு,

"இவ்வளவு நாளாக இங்கு வேலை பார்க்கிறாய் எந்த மரத்தின் பழம் இனிக்கும், எந்த மரத்தின் பழம் புளிக்கும் என்று கூட உனக்குத் தெரியாதா" என்று கூறினார். உடனே ஹழ்ரத் கூறினார்கள். என்னுடைய வேலை சுவைத்துப் பார்ப்பது இல்லை. வேலை பார்ப்பது தான் என்றார் . அதற்கு எஜமானர் கூறினார். நீ என்ன இப்ராஹீம் இப்னு அத்ஹமா? நம்பிக்கைக்கு உரியவர் போன்று பேசுகிறாயே என்றார் . ஹழ்ரத் அவர்கள் ஆம் என்றார்கள் வேலையை விட்டு விட்டார்கள். உடனே எஜமானர் மன்னிப்பு கேட்டார். பிரியமான பிள்ளைகளே நீங்களும் நம்பிக்கைக்குரியவர்களாக திகழுங்கள்.

## 8. நேர்மை

அன்புக்குரிய பிள்ளைகளே, நேர்மை உண்மை என்பது உயர்ந்த குணமாகும். நேர்மையாளர்களை அனைவரும் விரும்புகிறார்கள். நேர்மையாக இருப்பதால் பல அபாயங்களிலிருந்து பாதுகாப்புப் பெற முடிகிறது. பொய் சொல்வது, ஏமாற்றுவது, சூழ்ச்சி செய்வது மிகக் கெட்ட செயலாகும். அதனால் மரியாதை போய் விடுகிறது. நமது முன்னோர்கள் நேர்மையின் சிகரமாக திகழ்ந்துள்ளார்கள். ஹதீஸ்கலை வல்லுநர் இமாம் புஹாரி ( ரஹ் ) அவர்கள் ஒருவரிடத்தில் ஒரு ஹதீஸ் இருப்பதாக கேள்விப்பட்டு அதை தெரிந்து கொள்ளுவதற்காக அவரிடம் சென்றார்கள்.

அப்பொழுது அவர் ஓடிப்போன தனது குதிரையை தன்னிடம் அழைப்பதற்காக காலியான ஒரு கூடையை காட்டினார்கள். அதில் ஏதோ தீனி இருக்கிறது என்று நினைத்து குதிரையும் வந்து விட்டது. இதை கண்ணுற்ற இமாம் புஹாரி (ரஹ்) அவர்கள் இவர் ஏமாற்றுகாரராக இருக்கிறார் என்று ஹதீஸை கேட்காமலே வந்து விட்டார்கள். பிரியமான பிள்ளைகளே நீங்களும் நேர்மையாக இருங்கள். யாரையும் ஏமாற்றாதீர்கள்.

## 9. விட்டுக் கொடுத்தல்

பிள்ளைகளே! நமக்கு இல்லாவிட்டாலும் பரவாயில்லை அடுத்தவர்கள் நன்றாக இருக்க வேண்டும் என்பதை விரும்புவது மிக உயர்ந்த குணமாகும். இதற்குத் தான் விட்டுக் கொடுத்தல் என்று பெயர். இப்படிபட்டவர்களை இறைவனும் விரும்புகிறான். மக்களும் விரும்புகின்றனர். ஓரிடத்தில் மூன்று பேர் காயம் ஏற்பட்டு உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தார்கள். தண்ணீர் தாகம் ஏற்பட்டது. அப்பொழுது ஒருவர் தண்ணீர் கொண்டு வந்தார். முதலாம் நபர் இரண்டாவது நபருக்குக் கொடுக்க சொன்னார். ஆனால் அவரோ எனக்கு வேண்டாம் முன்றாம் நபருக்குக் கொடுங்கள் என்று சொன்னார். இதே போன்று ஒரு ஸஹாபியின் வீட்டுக்கு ஒருவர் விருந்தினராக வந்தார்.

தங்களுக்கு வைத்திருந்த உணவையெல்லாம் அந்த விருந்தினருக்குக் கொடுத்து விட்டு குடும்பத்தினர் அனைவரும் பட்டினியாக இருந்து கொண்டார்கள். பிள்ளைகளே! நாமும் முடிந்த அளவு விட்டுக் கொடுப்பவர்க்ளாக, பிறர் நலம் பேணுபவர்களாக வாழ வேண்டும்.

## 10. பொறாமை

அடுத்தவர்களிடத்தில் இருக்கக்கூடிய உயர்ந்த தன்மைகளைப் பார்த்து எரிச்சல் படுவது. அந்த தன்மை அவர்களை விட்டு நீங்கி விடவேண்டும் என்று எதிர் பார்ப்பது. இது பொறாமை என்று சொல்லப்படும். பொறாமை மிகப் பெரிய பாவமாகும். பொறாமைப் படுவதால் விறகை நெருப்பு சாப்பிடுவதைப் போல நம்முடைய நல்ல காரியங்களை பொறாமை அழித்து விடுகிறது. நபி பெருமானார் (ஸல்) அவர்கள் அருளினார்கள். பொறாமை படாதீர்கள். குரோதம் கொள்ளாதீர்கள். சகோதரர்களாக வாழுங்கள். அன்பாக பழகுங்கள். பிள்ளைகளே ! ஹஜ்ரத் மூஸா ( அலை) அவர்கள் அல்லாஹ் விடத்தில் பேசும் போது மூன்று தன்மை உள்ளவர்களுக்கு அர்ஷீ உடைய நிழல் கிடைக்கும் என்று அல்லாஹ் கூறினான்.

1. பொறாமைப் படாமல் இருப்பது. 2. பெற்றோர்களுக்கு மாறு செய்யாமல் இருப்பது 3. புறம் பேசாமல் இருப்பது. பிள்ளைகளே நீங்களும் பொறாமைப் படாமல் இருங்கள்.

## 11 எளிமையான வாழ்வு.

சாதாரண உணவு, உடை, இருப்பிடம் போன்றவைகளை வைத்து வாழ்க்கை நடத்துவற்கு எளிமை என்று சொல்லப்படும். எனது உம்மத்தில் உள்ள நல்லவர்கள் எளிமையாக இருப்பார்கள்.ஆடம்பரமாக சொகுசாக இருப்பதை விரும்ப மாட்டார்கள் என்று நபிகளார் ( ஸல்) கூறினார்கள். அவர்களும் எளிமையாகவே வாழ்ந்தார்கள். கைலி, ஜிப்பா, தொப்பி அணிவார்கள். சில சமயம் ஜிப்பா இல்லாமல் வெறும் சால்வையை மேலே போட்டுக் கொள்வார்கள்.

கோதுமை ரொட்டி சாப்பிடுவார்கள். பேரீத்தம் பழம் உண்பார்கள். சிறிய அளவில் தான் வீடு இருந்தது. சில சமயங்களில் சாக்கு விரிப்பில் உறங்குவார்கள்.. சில சமயங்களில் பாய், கட்டிலில் படுத்து உறங்குவார்கள். மக்களிடம் இயல்பாக பழகுவார்கள். ஏழை எளியவர்களுடன் அமர்ந்து பேசுவார்கள். தனக்கென்று தனித் தன்மை இருக்க வேண்டும் என்று விரும்பியதில்லை. வேலைக் காரர்களுடன் அமர்ந்து கூட சாப்பிடுவார்கள். கால் நடைகளுக்கு தீனி போடுவார்கள். வீட்டு வேலைகளைச் செய்வார்கள். சுரைக்காய் கூட நறுக்கி கொடுத்துள்ளார்கள்.

## 12. மன தைரியம்

பிள்ளைகளே !. துன்பங்கள் வரும் பொழுது மன தைரியத்துடன் அதை சகித்துக் கொள்ள வேண்டும். துணிவு மிகவும் அவசியமான ஒன்றாகும். துணிவுள்ளவன்தான் வெற்றியடைய முடியும். தைமூர் என்று ஓர் அரசர் இருந்தார். அவர் தன் வீரத்தால் பல நாடுகளை வெற்றி கொண்டார். ஒரு தடவை ஒரு யுத்தத்தில் தோல்வி ஏற்பட்டது. படையினர் எல்லாம் ஓடி விட்டார்கள். இவர் ஒரு குகைக்குள்ளே போய் மறைந்து கொண்டார். அங்கு ஒரு எறும்பு ஒரு சிறு தானியத்தை வாயிலே கவ்விக் கொண்டு ஒரு சுவற்றின் மேலே ஏறுகிறது. ஏற முடியாமல் கீழே விழுகிறது, பல தடவை இவ்வாறே முயற்சி செய்து ஏறிச் சென்று விட்டது. இதைப்பார்த்த அரசருக்கு துணிச்சல் வந்தது. உடனே குகையை விட்டு வெளியே வந்து படையை ஒன்று சேர்த்து யுத்தத்தில் வெற்றி பெற்றார்.

## 13. மன்னிப்பு

அன்புள்ள பிள்ளைகளே! நமக்கு யாரேனும் துன்பம் கொடுத்தால் பழிவாங்குவதற்கு சக்தி இருந்தும் மன்னித்து விட்டு விடுவது மிக உயர்ந்த குணமாகும். எனவே உங்களுக்கு மன்னிப்பு மனப்பான்மை வேண்டும். "மன்னிக்கும் மனப்பான்மையை தேர்ந்தெடுங்கள்" என்று அல்லாஹ் குர் ஆனில் கூறுகிறான். மன்னிப்பதனால் அல்லாஹ் பிரியப்படுகிறான். நமது பாவங்களை அல்லாஹ் மன்னிக்கிறான். நமக்கு கூலி கொடுக்கிறான். யாரை மன்னித்தோமோ அவர் மனமாற்றம் அடைகிறார். மன்னிப்பது வீரமான செயலாகும். கோபத்தை அடக்குபவன் தான் வீரன் என்று நம் நபியவர்கள் கூறுகிறார்கள்.

நம் நபியவர்கள் மன்னிக்கும் மா மனிதராக திகழ்ந்தார்கள். உங்களுக்கு துன்பம் கொடுத்தவர்களுக்கு சாபமிடுங்கள் என்று நம் நபியைப் பார்த்து சிலர் கூறினார்கள். அதற்கு "நான் சாபமிடுவதற்காக அனுப்பப்பட வில்லை" என்றார்கள். எனவே நாமும் மற்றவர்களை சாபமிடுவதை விட்டும் அல்லாஹ் நம்மை பாதுகாப்பானாக. ஆமீன்!

## 14. பொய் சொல்வது.

பொய் சொல்வது மிக கெட்ட குணமாகும். பொய் சொல்பவர்களை மக்கள் வெறுக்கின்றார்கள். நீங்கள் பொய் சொல்லக் கூடாது. பொய் சொல்பவர்களை அல்லாஹ் வெறுக்கிறான். பொய் சொல்பவர்களை அல்லாஹ் நரகத்திற்கு அனுப்புகிறான் என்று நம் நபியவர்கள் கூறினார்கள். பொய் சொல்வது பல பாவங்களுக்கு காரணமாக ஆகி விடுகிறது. எனவே பிரியமான பிள்ளைகளே நீங்கள் பொய் சொல்லாதீர்கள்.

## 15. புறம் பேசுவது.

அடுத்தவர்களிடத்தில் உள்ள குறைகளை பிறரிடத்தில் கூறுவது புறம் பேசுவதாகும். புறம் பேசுவது கெட்ட குணமாகும். உன்னைப்பற்றி யாராவது புறம் பேசினால் உன் மனம் எப்படி துன்பப்படும் என்பதை எண்ணிப்பார் புறம் பேசுபவனுக்கு நிம்மதி

இருப்பதில்லை. அல்லாஹு தஆலா சில்ரை குருடாக, ஊனமாக படைத்திருக்கிறான். அவர்களை குறை கூறுவது இறைவனையே குறை கூறுவது போன்றதாகும். அல்லாஹ் நம்மை அப்படி படைக்க வில்லை என்பதற்காக அவனுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும். "புறம் பேசுவது செத்த மனிதனின் மாமிசத்தை சாப்பிடுவதற்கு ஒப்பாகும் "என்று அல்லாஹ் குர் ஆனில் கூறுகிறான். எனவே நீங்கள் யாரையும் புறம் பேச வேண்டாம்.

## 16. திருட்டு.

பிரியமான பிள்ளைகளே! தேள், பாம்பைப் பார்த்தால் நாம் பயப்படுகிறோம் ஏனென்றால் அது நமக்கு தீங்கு செய்வதால் தான். இதே போன்றுதர்ன் திருட்டுப் பழக்கம் உள்ளவர்களை கண்டால் மக்கள் கேவலமாக பார்க்கிறார்கள் திருடுவது மிகக் கொடிய பாவமாகும். பத்து திர்ஹம் அளவுக்கு திருடுபவர்களின் கையை மணிக்கட்டு வரை வெட்ட வேண்டும் என்று நமது இஸ்லாம் கூறுகிறது,

இந்த தண்டனையை சிலர் குறை கூறுகிறார்கள். இது தவறாகும். ஏனெறால் இப்படி தண்டனை இல்லாமல் இருப்பதால் தான் இன்று திருட்டுகள் அதிகமாக நடக்கிறது. " திருடுபவர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் ஏற்படும் "என்று நபி பெருமானர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே நாம் அடுத்தவர்களின் பென்சில், பேனா, நோட்டு, புத்தகம் எதையும் திருடக் கூடாது. அடுத்தவர்களிடத்தில் எவ்வளவுதான் உயர்ந்த பொருள்கள் இருந்தாலும் அதை ஏறிட்டு பார்க்க கூடாது.

## 17. பாவ மன்னிப்பு

பிள்ளைகளே! பெற்றோர்கள் உங்கள் மீது பிரியமாக இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு நீங்கள் மாறு செய்தாலோ, அவர்களுக்குப் பிடிக்காத செயலைச் செய்தாலோ அவர்கள் உங்களை கோபிக்கிறார்கள். வெறுக்கிறார்கள்.

இதே போன்று நம்மைப் படைத்து பரிபாலிக்கும் எல்லாம் வல்ல அல்லாஹுதஆலா நம்மை நேசிக்கிறான். ஆனால் நாம் அவனுக்கு மாறு செய்தால் நம்மை கோபிக்கிறான். எனவே நாம்

எந்தப் பாவங்களும் செய்யக் கூடாது. மனதை அடக்க வேண்டும். எப்பொழுதாவது ஏதாவது தெரியாமல் பாவம் செய்து விட்டால் உடனே அல்லாஹ்விடத்தில் பாவ மன்னிப்புத் தேட வேண்டும். இல்லாவிட்டால் உள்ளத்தில் பாவக்கறை படிகின்றது. பாவமன்னிப்புத் தேடுபவர்களை அல்லாஹ் பிரியப்படுகிறான். "பாவ மன்னிப்பு கேட்பவன் பாவமே செய்யாதவனைப் போன்றவன் "என்று நபிகளார் கூறியுள்ளார்கள்.

## 18. உலக ஆசை

பிள்ளைகளே! உலகத்தில் உள்ள பொருட்களின் மீது மனதை பறிகொடுக்கக் கூடாது, அவசிய அளவிற்கு உலகத்தை பயன் படுத்திக் கொள்ள வேண்டும். உலக ஆசையில் மூழ்கி விடக் கூடாது, அல்லாஹ்வுடைய வணக்கங்களை செய்வதற்காகத்தான் நாம் இங்கு படைக்கப்பட்டிருக்கிறோம்.

அதை மறந்து விட்டு உலக இன்பங்களில் மூழ்கி விடக் கூடாது, "ஒரு நாள் வயிறாற சாப்பிட்டு அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்த வேண்டும். ஒரு நாள் பட்டினியாக இருந்து பொறுமை செய்ய வேண்டும் என்று தான் என் உள்ளம் நாடுகிறது" என்று நம் நபியவர்கள் கூறினார்கள்.

பெருமானாருடைய வீட்டில் ஒரு மாதம் தொடர்ந்து சமையல் செய்தது கிடையாது. பேரீத்தம் பழத்தை சாப்பிட்டு தண்ணீரை குடித்துக் கொள்வார்கள். இப்படித்தான் ஸஹாபா பெரு மக்களும் உலகப் பற்று இல்லாமலேயே இருந்திருக்கிறார்கள். ஹழ்ரத் அபூபக்கர் ஸித்திக் (ரலி) அவர்கள் இரண்டு ஜோடி ஆடைகள் தான் வைத்திருந்தார்கள்.

ஹஜ்ரத் உமர் ( ரலி) அவர்கள் பல இடத்தில் ஒட்டுப் போடப்பட்ட ஜீப்பாவை உடுத்தி இருக்கிறார்கள். ஹழ்ரத் உதுமான் (ரலி) அவர்கள் சாதாரண ஆடையைத்தான் உடுத்துவார்கள். ஹஜ்ரத் அலி (ரலி) அவர்கள் ஒட்டுப் போட்ட ஆடையைத்தான் உடுத்துவார்கள். அல்லாஹ்வுக்கும் இது தான் மிகவும் பிடிக்கும் என்று கூறுவார்கள். "ஒரு பயணியைப் போன்று இந்த உலகத்தில் இருங்கள்" என்று நபிகளார் கூறினார்கள்.

பிரியமான பிள்ளைகளே! உங்களது ஆசைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள். எளிமையாக வாழ பழகிக் கொள்ளுங்கள். உலகப் பொருள்களின் மீது ஆசை வைக்காதீர்கள்.

## 19. இறை பயம்

பிரியத்திற்குரிய பிள்ளைகளே! நாம் இவ்வுலகில் இருக்கப் போவதில்லை , என்றாவது ஒரு நாள் நாம் மரணித்து விடுவோம். எனவே நாம் மறுமைக்காக இங்கு சேகரிக்க வேண்டும். விலக்கல்களை விட்டு தவிர்ந்திருக்க வேண்டும்.

நாம் பாவங்கள் செய்யக் கூடாது. அல்லாஹ் நம்மைப் பார்க்கிறான் என்ற எண்ணம் எப்பொழுதும் இருக்க வேண்டும். அல்லாஹ்வை பயப்பட வேண்டும். நாம் பாவம் செய்தால் அல்லாஹ் நம்மை கோபிப்பான். நமக்கு துன்பம் கொடுப்பான் என்று எண்ண வேண்டும். அல்லாஹ்வை பயந்து வாழ்ந்தால் அவன் நம்மை பிரியப்படுகிறான் எனவே நாம் அல்லாஹ்வை பயந்து,தவறு செய்யாமல் வாழ வேண்டும். அல்லாஹ் நமக்கு உதவி செய்வானாக! ஆமீன்.

## 20-புத்தகம் படித்தல்

அருமையான பிள்ளைகளே! மனிதனுக்கு கல்வி மிக மிக முக்கியமாகும். உலக கல்வியிலும் நாம் தேர்ச்சி பெற்று விளங்க வேண்டும் மார்க்க கல்வியிலும் நாம் உயர்ந்து விளங்கவேண்டும். உலக கல்வி கற்க பள்ளிக்கூடம் செல்கிறோம். ஒழுக்கத்துடன் ஆசிரியர்களை மதித்து முதல் தரத்தில் தேர்ச்சி பெற வேண்டும். இது போல் ஒழுங்காக மத்ரஸாவிற்கு வருகை தந்து மார்க்க கல்வியை கற்பதில் கவனம் செழுத்த வேண்டும். உலக கல்வியால் இவ்வுலகத்தில் நமக்கு பயன் உண்டு. ஆனால் மார்க்க கல்வியால் நமக்கு ஈருலகிலும் பயன் உண்டு என்பதை மறந்திடக்கூடாது. மத்ரஸாவில் கற்கும் கல்வி ஓர் ஆரம்பக் கல்வியாகும். கற்றது கையளவு கற்காதது கடல் அளவு என்பார்கள். எனவே நீங்கள் வாழ்வில் சிறக்க குண-மண நலத்துடன் வாழ நல்ல நல்ல இஸ்லாமிய நூல்களைப் படிக்க வேண்டும். புத்தகம் படிக்கும் பழக்கத்தை கண்டிப்பாக உருவாக்கிக் கொள்ளுங்கள். வாழ்நாள் முழுவதும் நீங்கள் புத்தகங்களை படித்து வருவதால் நல்ல மனிதர்களாக உருவாகி வருவீர்கள். நல்ல குணம் உருவாகும். பெரியார்களின் அனுபவம் கிடைக்கும். அது உலக வாழ்விற்கு வழிகாட்டும். அதனால் சுகமான வாழ்வு அமையும். நல்ல நூல்களை பணம் கொடுத்து வாங்கும் பழக்கத்தை ஏற்படுத்துங்கள். அல்லாஹ் நமக்கு நல்லருள் புரிவானாக.! ஆமீன்.